# எழிலரசி-
# ராய்ப்பூர்
# இளவரசி
# யாரோ?

'மிஸ்-ஏஷியா 1973'

சிங்காரி, ஒய்யாரி, சகம்நாடும்

சேர்க்கும் டெபிலேன்டு ரூபியா
துணியிலே மங்கை அணிந்திடுவாள்

சேர்க்கும்.
டெபிலேண்டு புட்டா அவளுக்குத்
தேனாய் இனித்திடும்.

ரூபியா, பிரிண்டட் வாயில்கள்,
ஸ்கிரீன் பிரிண்டட் பாப்லின்கள்...
அழகு ராணி, இவற்றில் எதனை

ராய்ப்பூர் இளவரசியாய் விளங்க
வாய்ப்புண்டு உங்களுக்கும்!

'மிஸ் ஏஷியா 1973'



ராய்ப்பூர் மில்ஸ்

ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



லால்பாய் க்ரூப்
துணிகள்

CMLB.30.162 R TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜே. எஸ். படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு, **சென்னை-1; 76,** கிழக்கு மாரட் தெரு, மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. **வெங்கடேஷ் 234, 244,** என். எஸ். ஸி. போஸ் ரோடு, **சென்னை-1.** M/S. ஜஸ்வரீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.

# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர் –

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நாளையப் மிஞ்சு மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேருதவி**

*Johnson & Johnson**




லின்டாஸ்-J&J. 4-140 TM

"எங்கள் பள்ளிக்கூட டிரெஸ்,
வெள்ளை வெளேரென்று இருக்
கணுமுன்னு எங்கள் டீச்சர் சொன்
னாங்க— அதனாலேதான் எங்கம்மா
எப்போதும் ராபின் ப்ளூவை
உபயோகிக்கிறாங்க."

# வெள்ளைத் துணி-உடைகளை மிகப்பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதற்கு

# ராபின் ப்ளூ தான் தேவை

(என்பதை லட்சக்கணக்கான தாய்மார்கள்
ஒப்புக் கொள்ளுகின்றனர்.)




வெள்ளைத் துணி-உடைகளை, ஸோப்பு அல்லது டிடர்ஜென்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

ARBC-39 TAM

# கல்கி



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# பொருளடக்கம்

ஆனந்த, சித்திரை 22 — மே 5, 1974



மேலட்டை:

**விண்ணைச் சாடுவது பின்னே ;**
**விமானப் பயிற்சி முன்னே !**

வண்ணப் படம்: ஹரிகோபால்


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

நான் புகைபிடிப்பதை
விடவேண்டும் அல்லது
சிரிக்காமல்
இருக்க வேண்டும்.



ஐயோ! சொத்தைப்
பல்வலியால் உயிரே
போய்விடும்
போலிருக்கிறது.



பாக்குத் தூள்
மெல்லும்போதெல்லாம்
பற்களுக்கு இடையே
சிக்கிக் கொள்கிறது.



பற்களைத் துலக்கும்போது
ஈறுகளிலிருந்து இரத்தம்
கொட்டுகிறது.



வறுத்த கோழி எனக்குப்
பிடித்தமானதுதான்,
எனினும் பல்லிடுக்குகளில்
ஒட்டிக் கொள்கிறதே!



ஐஸ் க்ரீம் சாப்பிட
ரொம்ப ஆசை... ஆனால்
முடியவில்லையே!



# உங்கள் விருப்பம் எதுவாயினும் சரி பொருத்தமானது—வீட்டா டூத்ப்ரஷ்

1. வீட்டா கோல்ட்
2. வீட்டா காண்ட்டினென்டல்
3. வீட்டா ஜூனியர்
4. வீட்டா பேபி
5. வீட்டா டிலக்ஸ்
6. வீட்டா டிப்-க்ளீன்
7. வீட்டா ஸ்டாண்டர்ட்

மெல்லிய அல்லது வலிய ஈறுகள் மற்றும் வலிதருகின்ற, வளைந்த அல்லது நெற்றியுள்ள பற்கள் போன்ற ஒவ்வொருவிதமான தேவைக்கும் ஏற்ப கிடைக்கிறது வீட்டா. தேவைக்குத் தகுந்தபடியான டூத்ப்ரஷைத் தேர்ந்தெடுத்து உபயோகிக்காவிட்டால், ஒரு பயனும் இல்லை. பற்களைத் தூய்மையானதாக வைத்திருக்க ஒரு நல்ல டூத்பேஸ்ட் மட்டும் போதாதே!

வீட்டா ப்ரஷ் ஒவ்வொன்றும் விஞ்ஞான முறைச் சோதனைகளுக்கு உட்பட்டு 23 ஆண்டுகள் புகழ்வாய்ந்து நிற்கும் வீட்டாட்ரான் குச்சங்கள் கொண்டது. வீட்டா ப்ரஷ்கள் கவர்ச்சியான பல வண்ணங்களில் கிடைக்கின்றன.

அடுத்த முறை நீங்கள் டூத்ப்ரஷ் வாங்கும்போது, உங்கள் தேவைக்கேற்பத் தயாரான வீட்டாவையே கேட்டு வாங்குங்கள்!




தேவைக்கேற்றபடி
வகைவகையான ப்ரஷ்கள்

**Vita®**
**டூத்ப்ரஷ்கள்**

வீட்டா ப்ரஷ் கம்பெனி
பம்பாய்–400 001

AIYARS-VT. 2 REV. TM

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 33 — இதழ் 40




# தேசிய அரசு தேவையில்லையா?

அரசியல் கட்சிச் சார்பற்ற திறமையாளர்களையும் நிபுணர்களையும் கொண்ட தேசிய அமைச்சரவை அமைத்து அவர்களின் ஆலோசனைப்படி அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைகளை மாற்றினால் சீரழிந்துள்ள பொருளாதாரம் புனர் வாழ்வு பெற வகையுண்டு என்று பல நல்லவர்கள் கூறுகிறார்கள். இக்கருத்தைப் பிரதமர் இந்திரா காந்தி ஏற்றுக் கொள்ளவில்லை.

இதற்காக அவர் கூறும் காரணங்கள் இரண்டு. வங்க தேச அகதிகளால் ஏற்பட்ட நெருக்கடியின்போது எதிர்க்கட்சிகள் எல்லாம் ஒன்றாகச் செயல்பட்டு அரசாங்கத்துக்கு முழு ஆதரவு அளித்ததுபோல் இப்போதும் அளிக்க முன்வரவேண்டும் என்கிறார். எல்லா அரசியல் கட்சித் தலைவர்களுடனும் கூடி ஆலோசனைகள் நடத்தத் தாம் எப்போதுமே தயாராக இருப்பதாகவும், அவர்களின் ஒத்துழைப்புடனே இப்போது தோன்றியுள்ள பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்கத் தாம் விரும்புவதாகவும் கூறுகிறார்.

இவ்விரண்டு காரணங்களுமே ஒப்புக் கொள்ளக்கூடியவை அல்ல. பாகிஸ்தான் போரும் வங்க தேச அகதிப் பிரச்னையும் நாட்டின் பாதுகாப்பைப் பாதித்த விஷயங்கள். அந்நிய நாட்டின் தலையீடு என்பதால், மக்களின் உணர்ச்சி ஒருமைப்பட்டுச் செயல்பட முடிந்தது. இப்போதுள்ள பொருளாதார நெருக்கடி அயல்நாட்டுச் சூழ்ச்சிகளாலோ, போரின் விளைவினாலோ ஏற்பட்டதல்ல. காங்கிரஸ் கட்சியின் தவறான பொருளாதாரக் கொள்கைகளினாலும், தவறான நடவடிக்கைகளினாலும் உண்டானது. ஒவ்வொரு தவற்றையும் திருத்திக் கொள்ளும் முயற்சியில் மேலும் புதிய தவறுகள் செய்யப்படுகின்றன. சர்க்கார் துறை ஊடுருவல், உற்பத்தித் துறையில் மட்டுமின்றி விநியோகம், உள்நாட்டு வர்த்தகம், வெளிநாட்டு வாணிபம் போன்றவைகளுக்கும் விஸ்தரித்து உள்ளது. இவை திறம்படச் செயல் புரிவதில்லை என்பதோடு திறமையற்ற நிறுவனங்களை விரிவுபடுத்த வேறு செய்கிறார்கள். உற்பத்தி சுணங்கி வரும் நிலைமையை மாற்ற முடியவில்லை. விலைவாசி உயர்வும், பஞ்சப்படியும் ஒன்றையொன்று குடைராட்டினம் போல் துரத்திச் செல்கின்றன. மிதமிஞ்சிய பணப் புழக்கம் வேறு. இவையெல்லாம் காங்கிரஸ் கட்சியின் கொள்கைக் கோளாறினால் ஏற்பட்டவை. பலன் கொடுக்காத கொள்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது என்பதைப் பிரதமர் ஓரளவு உணர்ந்து கொண்டிருப்பதாகவே கருதலாம். ஆனாலும் அவரது இன்றைய ஆலோசகர்கள் கொள்கைகளை மாற்றிக் கொள்ள முன்வருவார்கள் என்று தோன்றவில்லை.

இந்தச் சூழ்நிலையில் எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பை எதிர்பார்ப்பது வீணே ஆகும். எதிர்க் கட்சிகளின் போக்கு ஆளும் கட்சியின் நடவடிக்கைகளில் குற்றம் குறைகளை எடுத்துச் சொல்வதில்தான் செல்லுமே தவிர ஒத்துழைப்பதில் செல்லும் என்று கூற முடியாது. ஆளும் கட்சியின் செல்வாக்கை ஓங்கச் செய்யும் வகையில், எதிர் அணியில் இயங்கும் அரசியல் கட்சிகள் செயல்படும் என்று எண்ணுவது பகற்கனவே.

இதனால்தான் கட்சிச் சார்பற்ற ஆலோசகர்களின் ஒத்துழைப்பை அரசு தேடிக் கொள்ள வேண்டும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். தன்னலமின்றி நாட்டுக்குச் சேவை செய்துவரும் தலைவர் காமராஜரும் இந்தக் கருத்தைச் சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவுபடுத்தியிருக்கிறார். பொருளாதார நெருக்கடி அபாயகரமான நிலைமைக்கு வந்துவிட்டது என்பதை நினைக்கும்போது, அதைத் தீர்க்க முயற்சி எடுப்பதுதான் விவேகமே ஒழிய, உளுத்துப்போன கொள்கைகளையுடைய ஆளும் கட்சியின் கௌரவம் முக்கியமல்ல.

ரம்பத்தைக் கண்டு எதுக்கு பயப்படறீங்க?

இந்தியா

தமிழ் நாடு

மாநில சுயாட்சி தீர்மானம்

சட்டசபை





# செய்திகள் பல; சிந்தனைகள் சில....



## நட்புறவு

இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் சிறிது காலமாக இருந்து வந்த கசப்புணர்ச்சி நீங்க வழி பிறந்திருக்கிறது. இந்திய சர்க்காரும் அமெரிக்க சர்க்காரும் இந்தோ—அமெரிக்க கமிஷன் ஒன்று நிறுவவிருக்கின்றனர். அதன் வாயிலாக இரு தேசங்களுக்கும் இடையில் பொருளாதாரம், தொழில் நுணுக்கம், கல்வி — கலாசாரத் துறைகளில் பரிவர்த்தனை நடக்கும். அரசியல் கசப்புக்களை மறக்கடித்து நட்பினை வளர்க்க இந்த இந்தோ — அமெரிக்க கமிஷன் உதவி புரியும். ராஜ தந்திர வல்லுநரான கிஸ்ஸிஞ்ஜரின் புதுதில்லி விஜயம் இரு நாடுகளுக்கிடையேயும் நட்புணர்ச்சியை வலுப்படுத்தும் என எதிர்பார்க்கலாம்.

## வில்லன் யார் ?

கான்பூர் லஜ்பத்ராய் மருத்துவ மனையில் குளுகோஸ் ஏற்றப்பட்ட நோயாளிகள் பலர் மாண்டதையொட்டிச் சிலர் கைது செய்யப்பட்டுள்ளனர். ஆனால் இவ்விஷயத்தில் கைதாகியுள்ளவர்களை மட்டும் வில்லன்களாகக் கருதுவதற்கில்லை. பொதுவாக சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் கையாளப்படும் நடைமுறையையே பெரிய வில்லனாகக் கருத வேண்டும்.

மருந்துகளுக்கு டெண்டர் கோருவதும் குறைந்த தொகைக்கு சப்ளை செய்பவர்களுக்கு ஆர்டர் தருவதுமான வழக்கம் தவறுவது. டெண்டர் தொகையையும், குறைத்துப் போட்டு லஞ்ச ஊழல்களையும் சமாளித்துக் கொண்டு, மருந்துகளை ஆஸ்பத்திரிகளுக்குத் தயாரித்து அளிப்பவர்கள் எந்த அளவுக்குத் தரமான மருந்துகளைத் தர முடியும்? கார் ஷெட்டிலே அவர்களது மருந்து தயாரிப்புத் தொழிலகம் நிறுவப்படுவதில் வியப்பென்ன?

உயர்தரமான கம்பெனிகளின் தயாரிப்புக்கள் ஆஸ்பத்திரிகளுக்கு வராததற்கு இதுவே காரணம். டெண்டரில் அவர்களால் போட்டியிட முடியாது; கட்டி வராது.

ஏதோ ஒப்புக்கு வைட்டமின், மருந்து என்றெல்லாம் நோயாளிக்குத் தராமல் உண்மையாகவே வைட்டமின் சத்துள்ள மாத்திரையும் சக்தி உள்ள மருந்தையும் கொடுக்க விரும்பினால் டெண்டர் தொகையை மட்டும் பார்த்தால் போதாது. அந்தத் தொகைக்கு மருந்து தயாரித்தளிக்க ஒப்புக்கொள்ளும் நிறுவனத்தின் அமைப்பு, ஆற்றல் முதலியவையும் கவனிக்கப்பட்டுத் தரங்கள் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

மருந்தின் தரம் குணம் முதலியவற்றை நிர்ணயிக்கும் புத்தகம் ஃபார்மகோபியா எனப்படும். நமது அரசுத் தொழிலகம் தயாரிக்கும் மைஸின் மருந்தின் தரம் அமெரிக்க ஃபார்மகோபியாவின் அளவுக்கு வரவில்லையானால் 'நாம் அமெரிக்கத் தர நிர்ணயத்தை அளவுகோலாகக் கொள்வானேன்? புதிதாகத் தர நிர்ணயம் செய்தால் ஆயிற்று' என்ற ரீதியில் காரியம் நடக்கும்போது ஆஸ்பத்திரியில் மட்டும் பாவம், ஏழை இந்தியன் என்னத்தைப் பிரமாதமாக எதிர்பார்த்துவிட முடியும்?

## வயிற்றைக் கட்டு, வாயைக் கட்டு!

உள் நாட்டில் மேலும் மேலும் தேவைகளைக் குறைத்துக் கொண்டு அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று நிதி அமைச்சர் சவான் கூறியுள்ளார்.

ஏழை இந்தியன் இரண்டு வாழைப் பழங்கள் சாப்பிட்டாவது வயிற்றை நிரப்பிக்கொண்டிருந்தான். இப்போது அதற்கும் கேடு வந்து விட்டது. விலை உயர்ந்து போயிற்று. பணவீக்கத்தால் ஏறும் விலை தவிர, வாழைப்பழம் ஏராளமாய் ருஷ்யாவுக்கு ஏற்றுமதியாவதால் வேறு இங்கே விலை உயர்வு. அதேபோல் வேர்க்கடலைக்குக்கூட இப்போது கிராக்கி. சர்க்கரையை மற்ற நாடுகளுடன் போட்டி போட முடியாமல் குறைந்த விலைக்கு ஏற்றுமதி செய்துவிட்டு அந்த நஷ்டத்தை ஈடுகட்ட இங்கே விலையை உயர்த்துகிறார்கள். இன்னும் பல பொருள்களின் நிலையும் இதுவேதான். இந்நிலையில் ஏற்றுமதியை அதிகரிக்க மேலும் தேவைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள் என்று சவான் கூறும்போது இன்னும் என்னென்ன பண்டங்களுக்குத் தட்டுப்பாடு ஏற்படுமோ, விலை ஏறுமோ என்று கவலையாக இருக்கிறது.

மேனாட்டவர் விரும்பி வாங்கக் கூடிய பொருள்களைக் கணித்து அவற்றின் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும்; மற்ற நாடுகளுடன் ஆரோக்கியமாகப் போட்டி போடக் கூடிய அளவில் மலிவாகத் தயாரிக்கவும் வேண்டும். இதற்கெல்லாம் ஊக்கமளிப்பதை விட்டு விட்டு வயிற்றைக் கட்டு, வாயைக் கட்டு என்ற ரீதியில் அரசு அறிவுரைகளை வழங்கியே மக்களின் வயிற்றை நிரப்பிவிடப் பார்க்கிறது.

## ஜம்பம் சாயுமா ?

ஒண்டிக் கொள்கிறேன் என்று வந்த ஒட்டகம் கூடாரத்திலிருந்தவனை வெளியேற்றியது போல் தமிழ் அர்ச்சனை ஒண்டிக்கொள்ள வந்து கடைசியில் வடமொழி அர்ச்சனையை வெளியேற்ற வழி வகுத்து விட்டது !

இனி தமிழில்தான் கோயில்களில் அர்ச்சனை நடக்க வேண்டும். இல்லாத போனால் நட-

வடிக்கை எடுக்கப்படும் என்பதாக அரசு உத்தரவிட்டிருக்கிறது.

இதிலிருந்து எழும் மக்களின் அடிப்படை உரிமைகள், தேசிய ஒருமைப்பாடு போன்ற பிரச்னைகளெல்லாம் ஒருபுறமிருக்க, ஏதேதோ சாதனைகளைச் செய்து விட்டதாகக் கூறிக் கொள்ளும் தி. மு. க. அரசு உண்மையாகவே மக்களின் மதிப்பைப் பெறுமளவுக்கு அவர்களுக்கு நன்மை செய்திருக்குமாறுல் இது போன்ற சில்லறைக் காரியங்களில் ஈடுபட்டு அற்பப் புகழ் சேர்க்க ஆசைப்பட வேண்டிய தில்லை.

சட்டத்தை விட ஓரளவு அதிகமாகவே வழிவழியாக வந்துள்ள பரம்பரைப் பழக்கங்கள், சம்பிரதாயங்கள் மக்களை நல்வழிப் படுத்தி வந்துள்ளன. எனவே சட்டத்தை உடைத்தெறிவது எவ்வளவு தவறே அந்த அளவுக்குச் சம்பிரதாயங்களைச் சிதைப்பதும் தவருகும். ஒன்றை மாற்றி அமைக்கும் அநாகரிகம் அடுத்ததற்கு அடிகோலும். சம்பிரதாயங்களைக் காப்பது நாகரிக முன்னேற்றத்தின் ஒரு முக்கிய அம்சம் என்பது உலகெங்கனும் உணரப்படும்போது நம்மவருக்குத் தெரியவில்லையே!

மசூதிகளிலோ மாதா கோயில்களிலோ சம்பிரதாயங்களை மாற்றி யமைக்க வேண்டும் என்று தி. மு. க. அரசு முயன்றுல் ஜம்பம் சாயுமா?

## தொட்டிலை ஆட்டி...

**ப**ஸ்கள் நெல்லிக்காய் மூட்டைகளாயின. ஓட்டுநர்களும் காற்றுத் தடை என்னும் ஏர் பிரேக்கை அவ்வப்போது உபயோகித்து மாங்காய் ஜாடியெனக் குலுக்கி மக்கள் பணி புரிந்தனர். நிறைந்து வழிந்த பஸ்களில் படிப் பயணம் பெருகியது; தொங்கல் பயணம் தொடர்ந்தது! மக்களுக்குப் பல சர்க்கஸ் வித்தைகள் சொல்லிக் கொடுத்த பெருமையையும் பஸ்கள் ஏற்றுக் கொண்டன. எல்லாம் பஸ் ஊழியர்களுக்கு ஊக்கத் தொகை அளித்ததில் ஏற்பட்ட விளைவு! நசுங்கிக் கொண்டோ, தொங்கிக் கொண்டோ எப்படியோ மணிக் கணக்காகக் காத்திராமல் வீடு போய்ச் சேர முடிகிறதே என்று மக்கள் சற்று நிம்மதி பெறுவது காவல் துறையினருக்குப் பொறுக்கவில்லை. படிகளில் பயணம் செய்தால் தண்டனைக்குள்ளாவார்கள் என்று பயமுறுத்தி எச்சரிக்கை விடுத்தார்கள்.

சர்க்கார் தொட்டிலை ஆட்டினுல் போலீஸ் குழந்தையைக் கிள்ளுகிறது!

போதாததற்கு மே மாதம் முதல் பஸ் கட்டணத்தில் உயர்வு! அதிக பஸ்களை விட்டு வசதிகளையும் உயர்த்திப் படிகளில் பயணம் செய்வதற்கு அவசியமே இல்லாமல் செய்து விடலாமே?

## பலப்பரீட்சைக்கு ஆயத்தமா?

**ர**யில்வே தொழிலாளர்களைத் தங்கள் பிடியில் வைத்துக் கொண்டிருக்கும் வெவ்வேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்த நூறு யூனியன்கள் மே மாதம் 8ந் தேதிக்குப்பின் பொது வேலைநிறுத்தம் செய்யப் போவதாக நோட்டீசு கொடுத்திருக்கின்றனர். எட்டு அம்சம் கொண்ட கோரிக்கைக்கு அனுபந்தமாக அனுப்பப்பட்ட இந்த அச்சுறுத்தல் செயல்பட்டால் நாட்டின் பொருளாதாரமும் பொது வாழ்க்கையும் ஸ்தம்பித்துப் போகும். ஏற்கனவே இதர காரணங்களால் பொருளாதாரம் சீரழிந்துள்ளது. இதை மேலும் சீர்கெடச் செய்யும் இந்த வேலைநிறுத்தம். இதையே தங்களுடைய பலத்தின் அடிப்படை என்று தொழிலாளர் சங்கங்கள் நினைத்துப் பலப் பரீட்சையில் இறங்கினுல் தேசப்பற்று அவர்களுக்குக் குறைவு என்ற முடிவுக்கே வர வேண்டி யிருக்கும்.

பேசித் தீர்க்கமுடியாத கோரிக்கைகளை அடுக்கி, அவற்றையெல்லாம் ஒரே சீராக ஒப்புக் கொண்டே ஆகவேண்டும் என்று வற்புறுத்துவது சமரசத்துக்கு வழி அல்ல. முக்கியப் பிரச்னை போனஸ் விஷயமும் சம்பள விகிதமும். இவ்விரண்டிலும் சுலபமாகவே சமரஸம் ஏற்படுத்திக் கொள்ளலாம்.

பேச்சுவார்த்தைகள் மூலம் சமரசம் காண முயல்வதுதான் அரசாங்கத்துக்கும், தொழிலாளர்களுக்கும், நாட்டுக்கும் நல்லது.

---

நோயில்லாத கண்ணுனது தன் எதிரில் நிற்கும் எதையும் பார்க்கும். பசுமையான பொருள்களை மாத்திரம் பார்ப்பேன், மற்ற நிறங்களைப் பார்க்க முடியவில்லை என்றுல் அது கண்ணில் நோய் இருப்பதற்கு அறிகுறியாகும். அவ்வாறே செவியும், மூக்கும் எந்த ஒலியையும், எந்த நாற்றத்தையும் உட்கொள்ளும். யந்திரத்தில் எப்பண்டமும் அரைபடுவது போல் நோயில்லாத வயிற்றில் எந்த உணவும் ஜீரணித்துப் போகும். இவ்வாறே நோயில்லாத உள்ளத்திலும் எது நேர்ந்தாலும் ஜீரணித்துப் போக வேண்டும். அதாவது பொறுமையுடன் அதைத் தாண்ட வேண்டும். என் மக்களுக்கு எது லாபம், நான் செய்கிறதை ஜனங்கள் புகழ்கிறர்களா என்பது போன்ற கவலைகள் உண்டானுல் மனிதன் நோய்ப்பட்டவனே ஆவான். இதைப் பார்க்க முடியும், அதைப் பார்க்க முடியாதென்று சொல்லும் நோய்ப்பட்ட கண்ணைப் போலவும் இதை மெல்ல முடியும், இதை மெல்ல முடியாது என்று மறுக்கும் பற்களைப் போலவும் அவன் உள்ளம் ஆரோக்கியமற்ற உள்ளமாகும்.

**ராஜாஜியின் ஆத்ம சிந்தனையிலிருந்து**

# க்ரோஷே நீங்கள் நினைப்பதைவிடச் சுலபமானது...

## கோட்ஸ் ஆங்கர் நூல்கள் உங்கள் க்ரோஷே பின்னல் வேலைக்குக் கவர்ச்சியூட்டி, நீடித்து நிற்கச் செய்கின்றன!

ட்ரே செட்டுகள், நாற்காலி உறைகள், படுக்கை விரிப்புகள் போன்ற வீட்டுச் சாமான்கள் முதல் அதி நாகரிகமான உடைகள் மற்றும் துணைப் பொருள்கள் வரை பல பொருள்களை நீங்கள் க்ரோஷேயில் அழகாகப் பின்னிக்கொள்ளலாம்.
கோட்ஸ் ஆங்கர் க்ரோஷே நூல்கள், பளபளப்பு மங்காத, கெட்டிச் சாயம் தோய்த்த அழகான பற்பல வர்ணங்களில் வருகின்றன. உங்கள் க்ரோஷே வேலைப் பாடமைந்த அழகான பொருள்கள் எல்லாம் பல சலவைகளுக்குப் பிறகும் புத்தம் புதுத் தோற்றமுடன் திகழும்.
உங்கள் தேவைகளுக்கேற்ப அமைத்துக் கொள்ளக் கூடிய பற்பல வசீகரமான டிசைன்கள் கோட்ஸ் பிரசுரங்களில் கொடுக்கப் பட்டுள்ளன. நீங்கள் புதிதாகக் க்ரோஷே கற்றுக் கொள்பவராக இருந்தால் உங்களுக்கெனவே உள்ளது ''லேர்ன் டு க்ரோஷே'' என்னும் புத்தகம். உங்கள் பிரதியைப் பெற அடியில் காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து தபாலில் சேருங்கள் அல்லது தேவையான பேட்டர்ன் புத்தகங்களையும், கோட்ஸ் ஆங்கர் க்ரோஷே நூல்களையும் தேர்ந்தெடுக்க அருகாமையில் உள்ள கோட்ஸ் வியாபாரியிடம் செல்லுங்கள்.



தயவு செய்து உங்கள் ''லேர்ன் டு க்ரோஷே'' புத்தகத்தை எனக்கு அனுப்பவும். இத்துடன் ரூ. 3/-க்கு போஸ்டல் ஆர்டர் அனுப்பியிருக்கிறேன்.

பெயர் ______________________

முகவரி ______________________

______________________

**J & P Coats (India) Private Ltd.**
Advertising Section, 81 Palton Road, Bombay 400 001



# ஆங்கர்

க்ரோஷே நூல்கள்



# கோட்ஸ்

*சிறந்த நூல்களைத் தயாரிப்பவர்கள்*

# ஸ்ரீ யோக கருமாரி அம்மன் அதிஷ்டானம்

**திருவேற்காடு, சென்னை - 600077**





திருவேற்காடு ஸ்ரீ யோக கருமாரி அம்மன் அதிஷ்டானத்தில் உலக நலனுக்காக இரண்டாவது ஆண்டு ஸ்ரீ சதசண்டி மஹாஹோமம் 26-5-74 அன்று ஆரம்பித்து 4-6-74 விசாக பௌர்ணமி அன்று மஹா பூர்ண ஆஹுதி நடைபெறும். தினந்தோறும் சண்டி ஹோமத்திற்கு இடையில் கீழ்க்கண்ட ஹோமங்கள் நடைபெறும்.

27-5-74 — சோடச கணபதி ஹோமம்
28-5-74 — நவக்ரஹ ஹோமம்
29-5-74 — வனதுர்க்கா ஹோமம்
30-5-74 — ம்ருத்யஞ்ச ஹோமம்
31-5-74 — ஸ்ரீலக்ஷ்மி ஹோமம்
1-6-74 — சுதர்சன ஹோமம்
2-6-74 — யோக மஹாமாரி ஹோமம்
3-6-74 — கார்த்த வீர்யார்ஜுன ஹோமம்

**4-6-74** கோ பூஜை, கஜ பூஜை, கன்னிகா பூஜை, சுமங்கலி பூஜை, வசோத்தாரை, ஸ்ரீ சதசண்டி ஹோமம், பூரண ஆஹுதி, ஸ்ரீ யோக கருமாரி அம்மனுக்கு மஹா அபிஷேகம்.

அதிஷ்டான அங்கத்தினர் அருள்மொழி அரசி ஸ்ரீமதி சௌந்திரா கைலாசம் ஹோமத்தில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ யோக கருமாரி அம்மன் வெள்ளி டாலரை வெளியிடுவார்.

ஒரு ஹோமத்திற்குக் கைங்கர்யம் செய்பவர் ரூ. 108/-ம், வெள்ளி டாலர் வேண்டுவோர் ரூ.11/-ம், நன்கொடை அனுப்ப விரும்புவோரும் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

ஸ்ரீ யோக கருமாரி அம்மன் சதசண்டி மஹாஹோம கமிட்டி
ஸ்ரீ யோக கருமாரி அம்மன் அதிஷ்டானம்
திருவேற்காடு, சென்னை - 600077

தலைவர் : அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார்
உப தலைவர் : அம்பிகை அடிமை ஸ்ரீ சங்கரன், திருவேற்காடு

**அதிஷ்டானக் கமிட்டி**

ஸ்ரீ M. V. சுவாமிநாதன் B. Com., —Secretary
ஸ்ரீ M. விஸ்வநாதன் —Treasurer

**ஹோமக் கமிட்டி**

ஸ்ரீ V. S. தியாகராஜன் B. Sc., —Secretary
ஸ்ரீ R. V. ரமணி B. E., —Joint Secretary
ஸ்ரீ P. V. சீதாராமன் —Treasurer



# அம்பாளை உபாசிப்பதன் பலன்

4

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

அம்பாளின் பாதத்தில் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய திரிமூர்த்திகளும் நமஸ்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அதனால் இவள் பாதத்தில் நாம் பண்ணுகிற அர்ச்சனை அவர்களுடைய சிரஸுக்கும் பண்ணிய அர்ச்சனை ஆகிறது என்று ஆசாரியாள் சொல்கிறார். 'பவானி உன் தாஸன் நான்' என்று துதிக்க ஆரம்பிக்கிறவனுக்கு அம்பாளாகவே ஆகிவிடுகிற அத்வைத மோக்ஷத்தை அவள் அநுக்கிரகித்து விடுகிறாள் என்று சொல்கிற போது, அவளுடைய பாதத்தில் விஷ்ணு, பிரம்மா முதலானவர்களின் கிரீடத்தில் உள்ள ரத்தின மணிகளிலிருந்து எழுகிற ஒளி கற்பூர ஹாரத்தி செய்வதுபோல் பிரகாசிக்கிறது என்கிறார். இப்படி எல்லா தேவர்களும் அவள் பாதத்தில் கிடப்பதாகச் சொல்வதற்குத் தாத்பரியம் ஒரு தேவதை உசத்தி, இன்னொன்று தாழ்த்தி என்பதல்ல. எல்லாச் சக்திகளும், — மநுஷ்யர்களின் சக்தி, மிருகங்களின் சக்தி, தேவர்களின் சக்தி, இயற்கையில் காண்கிற பல சக்தி, இவை எல்லாமும் . மூலமான ஒரு சக்தியின் திவலைகளே என்பதுதான் தாத்பரியம். இதைத்தான் ஸயன்ஸிலும் ஒரே 'எனர்ஜி' தான் பலவிதமான அணுக்களாயிருக்கிறது என்கிறார்கள். அந்த மூல சக்தியை அன்போடு ஆராதித்தால் அதுவும் அன்போடு அநுக்கிரகம் செய்கிறது. மற்ற தனித் தனித் தேவதைகளுக்கு இருக்கிற 'சக்தி எல்லாமும் இதனிடமிருந்து வந்ததுதான். எனவே அந்த சக்தியை அம்பாளாக ஆராதிக்கிற போது எல்லாத் தேவதைகளின் அநுக்கிரகத்தையும் பெற்றுவிடலாம். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் எல்லாம் அந்த ஒரே சக்தியிடமிருந்து உண்டானவைதாம். அதனால் அவளைப் பூஜிப்பதால் பிரம்ம, விஷ்ணு, ருத்திரர்களையும் பூஜித்ததாகிறது. சரஸ்வதி, லக்ஷ்மி ஆகியவர்களுக்கும் இவள் ஆராதனையே வழிபாடாகியது; வித்யை, செல்வம் எல்லாம் பக்தனுக்குச் சித்திக்கின்றன. அம்பாளை உபாசிப்பதால் கிடைக்காத பலன் எதுவும் இல்லை. பணத்திலிருந்து, தேக லாவண்யத்திலிருந்து ஆரம்பித்து மோக்ஷ பரியந்தம் எல்லாம் கிடைக்கின்றன.

சாஸ்திரங்கள் இதிலே சில பலன்களை விசேஷமாகச் சொல்கின்றன. அம்பாளை உபாசிப்பதால் மிகவும் உத்தமமான வாக்கு சித்திக்கிறது. கவித்வத்தை அவள் விசேஷமாக அநுக்கிரகிக்கிறாள். காளிதாஸர் பூர்வத்தில் ரொம்பவும் மந்தமாக இருந்தார் என்றும், உஜ்ஜயினியில் காளியின் அநுக்கிரகம் கிடைத்தே அவர் கவி சிரேஷ்டரானார் என்றும் கதை கேட்டிருப்பீர்கள். ஊமையாக இருந்த மூகருக்குக் காஞ்சியில் காமாக்ஷியின் தாம்பூல உச்சிஷ்டம் கிடைத்து, அவர் மகாகவியாகி அம்பாள் மீது ஐந்நூறு அற்புத சுலோகங்களைக் கடல் மடை திறந்த மாதிரி கொட்டியிருக்கிறார்.

கவித்வம், சங்கீதம் முதலிய கலைகள் எல்லாம் அம்பிகையின் அநுக்கிரகத்தால் உண்டாகின்றன. இதற்கெல்லாம் சரஸ்வதியை அதிதேவதையாகச் சொல்கிறோம். இப்படிப்பட்ட சரஸ்வதி, அம்பாளின் சந்நிதானத்தில் எப்போதும் வீணையோடு கானம் பண்ணிக் கொண்டிருக்கிறாளாம். மகாபதிவிரதையான அம்பிகை பரமேசுவரனின் லீலைகளையெல்லாம் பாடும்படி சரஸ்வதியிடம் சொல்கிறாளாம். அதன்படி வாணி ஈசுவரப் பிரபாவத்தைப் பாடிக் கொண்டேயிருக்கிறாள். அம்பாள் அதை ரொம்பவும் ரசித்து ஆனந்தப்படுகிறாள். கேட்கிறவர்கள் ஆனந்திப்பதே பாடுகிறவனுக்கும் ஆனந்தத்தைத் தந்து மேலும் உற்சாகப்படுத்தும். அப்போதுதான் வித்வானுக்கு மேலே மேலே கற்பனை விருத்தியாகும். கேட்கிறவன் தப்புக் கண்டுபிடிக்கிற மாதிரியே உட்கார்ந்திருந்தால் வித்வானுக்கு இருக்கிற பிரதிபா சக்தியும் போய்விடும். அம்பிகை ஆனந்தத்தோடு உத்ஸாகப்படுத்த சரஸ்வதி கானம் பண்ணிக்கொண்டே இருக்கிறாள். அம்பாள் ரொம்பவும் சந்தோஷப்பட்டுத் தலையை ஆட்டிக் கொண்டு ''பேஷ் பேஷ்'' என்று வாய்விட்டுச் சொல்லி விடுகிறாள். அவ்வளவுதானும்! அம்பாளுடைய அந்த வாக்கின் மாதுரியத்தில் சரஸ்வதியின் வீணாநாதம் அத்தனையும் ஒன்றுமில்லை போலாகிவிடுகிறதாம். 'இப்படிப்பட்ட மதுர வாக்குக் கொண்டவளுக்கு முன்பா என் வித்தையைக் காட்டினேன்?' என்று வெட்கப்பட்டுக் கொண்டு சரஸ்வதி தன் வீணையை உறையில் போட்டு மூடி வைத்துவிடுகிறாளாம். ''விபஞ்ச்யா காயந்தீ'' என்கிற ஸௌந்தரிய லஹரி சுலோகம் இந்தச் சம்பவத்தை நாடகம் போட்டுக் காண்பிக்கிற மாதிரி வர்ணிக்கிறது. ஸங்கீதம் முதலான கலைகளிலெல்லாம் அம்பாளை உபாஸிப்பதால் எளிதில் சித்தி பெறலாம் என்று அர்த்தம்.

அம்பாளை வழிபடுவதால் குருபக்தி, பதிபக்தி இவையும் விருத்தியாகும் என்றும் மகா கவிகள், பக்தி சிரேஷ்டர்களின் வாக்கிலிருந்து தெரிகிறது.




சீதாவும் சீதாவும் தங்கள் ஆவலை அடக்க முடியாமல் வாசலுக்கும் உள்ளுக்குமாக அலைந்து கொண்டிருந்தார்கள். சிட்டுக் குருவிகளையும் ஜோடிப் புறாக்களையும் நினைவூட்டின அவர்கள் செய்கை. கீதாவுக்கு ஆறு வயது. சீதாவுக்கு வயது நான்கு. அம்மாவின் அரவணைப்பு அந்தச் சிட்டுக் களுக்குக் கடந்த பதினைந்து நாட்களாகக் கிடைக்காத தாபத்தை அவர்களின் முக வாட்டமே சொல்லியது. அம்மாவுக்கு ஏதோ உடம்பு சரியில்லையாம். ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறாள். பாட்டி பரிந்து பரிந்து போட்டாலும் அம்மா மாதிரி இல்லை. முடியாமல் தள்ளாடிக் கொண்டு செய்யும் பாட்டியிடம் பரிதாபமே தோன்றியது அவ்விளம் குழந்தைகளுக்கு. பாட்டி நாள் முழுதும் வேலை செய்து ராத்திரி நீலகிரித் தைலப் பாட்டிலை வைத்துக் கொண்டு காலை நீட்டியபடி தடவிக் கொள்வதைக் கண்டால் கீதாவுக்குப் பிடிக்காது. தைல நாற்றம் சகிக்காது. ''ஐயே! ஒரே நாற்றம்'' என்று கீதா சொல்லிச் சிரிப்பாள். சீதா தான் அவளை அப்படிச் சொல்லக் கூடாதென்று கண்டிப்பாள். அப்பாவிடம் பாசத்தைக் காட்டிலும் பயம்தான். வாயை மூடிக் கொண்டு படுத்து விடுவார்கள். நடுநிசியில் அம்மாவின் நினைவினால் தன்னை அறியாமல் விசும்பும் சீதாவை அணைத்துக் கொள்ளும்போது சேகருக்குக் கஷ்டமாக இருக்கும். ''அப்பா இருக்கேன்! தூங்குடா கண்ணு!'' என்று சமாதானப் படுத்துவான்.

அப்பாடா! பட்ட கஷ்டமெல்லாம் விடிந்தது. அம்மா வரப் போகிறாள் என்று குழந்தைகள் இருவரும் ஆனந்தமாக வாசலிலேயே பார்த்துக் கொண்டிருந்தார்கள். பழக்கப்பட்ட அந்தக் கார் ஹாரனைக் கேட்டதும் அவர்கள் துள்ளியெழுந்தார்கள். ஒரே ஓட்டத்தில் வாசலுக்கு விரைந்தார்கள். சேகர் கதவைத் திறந்து அவளைக் கைத் தாங்கலாக நடத்தி ''மெதுவாக'' என்று சொல்லி அழைத்து வந்தான். அம்மாவின் தள்ளாமை கண்டு பயந்து போய் ஒதுங்கி நின்று விட்டாள் கீதா. சீதாவும் திகைத்து விட்டாள்.

''வாருங்கள், என் குஞ்சலங்களா!'' என்று தன் இரு கண்மணிகளையும் இரு பக்கமும் இழுத்து அணைத்துக் கொண்டாள் விஜயா.

வயிற்றில் மூன்றாவது செல்வம் அவளைப் படாதபாடு படுத்திக் கொண்டிருந்தது. அதைப் பொறுத்துக் கொண்டு கீதாவையும் சீதாவையும் உள்ளே அழைத்துச் சென்றாள்.

''ஏம்மா, நீ ஏன் இப்படி ஆயிட்டே? இனிமே வழக்கம் போல் நீ சமைக்க மாட்டியா? எங்களுக்குச் சாதம் போட்டுக் கதை சொல்ல மாட்டியா? ஸ்கூலுக்கு நீ டிரஸ் பண்ணமாட்டியா? இப்படியே படுத்துண்டே தான் இருப்பியா?'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கேட்டாள் சீதா.

கீதா அம்மாவை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இன்னும் கொஞ்ச நாட்களில் ஒரு குட்டிப் பாப்பா உங்களோடு விளையாட வரும். அதுக்கப்புறம் நான் முன் மாதிரி ஆயிடுவேன். அது வரைக்கும் அம்மாவைத் தொந்தரவு பண்ணக்கூடாது. அப்பாவுக்குக் கோபம் வரும்படியாக நடந்து கொள்ளக் கூடாது. பாட்டியைப் படுத்தாமல் சமர்த்தாக இருக்கணும்!'' என்று இலை மறைவு காய் மறைவாக விஷயத்தைச் சொன்னாள் விஜயா.

குழந்தைகள் இருவரும் ஆச்சரியத்துடன் வாயைத் திறந்து கொண்டு விஷயத்தைக் கேட்டார்கள்.

''ஏம்மா, பாப்பா! அந்தப் பாப்பா இப்போ எங்கே இருக்கு? எப்போ வரும்?'' என்று கேட்டாள் சீதா. தலையைச் சாய்த்துக் கொண்டு புதிரான பாவத்துடன் அவள் கேட்ட கேள்வி விஜயாவுக்குச் சிரிப்பை வருவித்தது.

இந்தக் குழந்தையைத் திட்டுவதா, என்ன செய்வது என்று தவிக்கையில் அவள் சிநேகிதி

பத்மா அவளைப் பார்க்க வந்தாள். பத்மா வரும் பொழுதே, ''என்ன விஜயா ? ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆகியிருந்தாயாமே ! நேத்துச் சாயங்காலம்தான் ஊரிலிருந்து வந்தேன். வந்தவுடன் இந்தச் சமாசாரத்தை என் கணவர் சொன்னார். ஒவ்வொரு தடவையும் பிரசவத்தன்றுதானே ஆஸ்பத்திரிக்குப் போவாய். இந்தத் தடவை என்ன செய்தது?'' என்று கவலையுடன் கேட்டு அவள் அருகில் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள்.

''சீதா, சீதா! போய் மாமிக்குக் காப்பி வேண்டுமென்று பாட்டியிடம் கேட்டு வாங்கி வாருங்களடி, சமர்த்துக்களா?'' என்றாள். ''அம்மாவைச் சிரமப்படுத்தாதே ! நமக்குள் என்ன உபசாரம் விஜயா ?'' என்றவளிடம், ''இந்த வால்கள் சற்று அந்தண்டை போகட்டும். இதுகளுக்கு எல்லா விஷயமும் எப்படியோ தெரிந்து விடுகிறது. சமயம் வரும் பொழுது குண்டு போட்ட மாதிரி வெடிக்கிறதுகள். அதனால்தான் அனுப்பினேன்'' என்றாள்.

பத்மாவும் சிரித்தாள். ''நாம் கொடுக்கும் கான்வென்ட் படிப்பு அவர்களை வயதுக்கு மீறிய புத்திசாலிகளாக்குகிறது. நீ இப்பொழுது சொல்லு. என்ன உடம்பு?'' என்று பத்மா விட்ட இடத்துக்கு மீண்டும் வந்தாள்.

''என்னவோ பத்மா இந்தத் தடவை உடம்பும் முன்பு மாதிரி தெம்பாக இல்லை. காலில் நரம்புகள் சுருட்டிக் கொள்கின்றன. தொடையிலிருந்து கணுக்கால் வரை அப்படி ஆகிவிட்டது. நடந்தால் யம வேதனை. ரொம்ப கஷ்டப்பட்டேன். எத்தனையோ டாக்டர்கள் கலந்து 'டிஸ்கஸ்' செய்தார்கள். இரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். நான் கண்களையும் காதுகளையும் பொத்திக் கொண்டேன். இந்தத் தடவை நான் பெற்றுப் பிழைப்பேனா என்ற சந்தேகம் கூட எனக்கு உள்ளூற இருக்கிறது.''

''அச்சடாட்டமா பேசாதே ! இந்தத் தடவை பிள்ளையாகத்தான் இருக்கும். அதுதான் இப்படித் தடபுடல் பண்ணுகிறான். உற்சாகமாக இரு. மத்தியான வேளையில் நன்றாக ஓய்வு எடுத்துக் கொள். ஏதாவது வேண்டுமானால் சொல்லி அனுப்பு. குழந்தைகளைப் பற்றிக் கவலைப்படாதே. நான் பார்த்துக் கொள்கிறேன். அங்கு கமலா, சுரேஷுடன் விளையாட அனுப்பிவிடு !'' என்று பலவாறு சொல்லிவிட்டுப் பத்மா வீட்டுக்குக் கிளம்பினாள்.

எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த நாளும் வந்தது. ''அம்மா ! நீ ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பாப்பாவைக் கொண்டு வா ! நாங்களே பார்த்துக் கொள்கிறோம். பாட்டியைப் படுத்தாமல் சமர்த்தாக இருக்கோம். சீதாவும் நானும் சண்டை போடாமல் இருக்கோம்!'' என்று பாடம் ஒப்பிக்கிற மாதிரி மடமட என்று பொரிந்து தள்ளினாள் கீதா. அந்த வேதனையிலும் விஜயா பூரித்துப் போய்ப் பெண்கள் இருவரையும் கட்டியணைத்து முத்தம் கொடுத்துவிட்டுக் காரில் ஏறினாள்.

விஜயாவுக்கு அது சற்றுச் சிரமமான கேஸாகத்தான் இருந்தது. மயக்கம் கொடுத்து ஆயுதம் போட்டுக் குழந்தையை எடுத்தார்கள். குழந்தையைப் பார்த்த டாக்டர், நர்ஸுகளுக்கு ஒரே அதிர்ச்சி. கசமுசவென்று பேசினார்கள். குழந்தையை அப்புறப்படுத்தினார்கள். சேகருக்கு டாக்டர் விஷயத்தைச் சொன்னவுடன் அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. தடுமாறியவாறு நாற்காலியில் உட்கார்ந்துவிட்டான். ''மிஸ்டர், நீங்களே இப்படிச் சங்கடப்பட்டால் அவளை யார் தேற்றுவது? கடவுளின் சோதனை! மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள்!'' என்றார் டாக்டர்.

''அவளை எப்படித் தேற்றுவது என்பதுதான் என் கவலை!'' என்று நெஞ்சை அடைக்கச் சொன்னான் சேகர்.

மயக்கம் தெளிந்தபின் விஜயா சுற்றுமுற்றும் பார்த்தாள். அவளுடைய அம்மா வாயில் காப்பியை விட்டாள். அம்மாவின் முகம் ஏன் இப்படிக் கலங்கிக் கிடக்கிறது ? கண்கள் நிறைய ஜலம் ஏன்? பாவம் அம்மா, கஷ்டப்பட்டால் தாங்கவே மாட்டாள். தான் பட்ட கஷ்டத்தை எண்ணிக் கலங்குகிறாள். ''அம்மா! நான் சரியாகிவிட்டேன். அழாதே! என்ன குழந்தை ?'' என்றாள் ஈனஸ்வரத்தில். தாய் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். நர்ஸ் விஜயாவின் பேச்சுக் குரலைக் கேட்டு ஓடி வந்தாள். ''என்ன குழந்தை என்று கேட்டால் சொல்லக் கூடாது? பெண்தான் அம்மா !'' என்று சொல்லிக் கொண்டே தன் கண்களால் முதியவளை எச்சரித்தாள்.

'மறுபடியும் பெண்ணா?' என்று வருத்தப் படுவேன் என்பதால் அம்மா முகத்தை அப்படித் திருப்பிக் கொண்டாளாக்கும் என்று எண்ணிக் கொண்டே விஜயா தன் தாயைத்






தேற்றினாள். '' 'ஏதாவது ஒன்று ; நல்லபடியாக ஆயுசோடு இருக்கணும்'னு சொல்கிற நீயே இப்படி வருத்தப்படலாமா? அம்மா குழந்தையைக் கொண்டு வரச் சொல்லேன்!'' என்றாள் ஆவலுடன்.

இந்த வேண்டுதலை எதிர்பார்த்தாலும் இத்தனை சீக்கிரம் எதிர்பார்க்காததால் நர்ஸும் தாயும் திடுக்கிட்டார்கள். ''உனக்கு மயக்கம் கொடுத்ததனால் அந்த வாடை குழந்தைக்குக் கெடுதல். இன்று முழுதும் குழந்தையை இங்கே கொண்டு வரக் கூடாது. நாளைக் காலையில் உனக்குக் காட்டுகிறோம்'' என்று நயமாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டாள் நர்ஸ்.

**ம**று நாள் காலை டாக்டர் சோகமான முகத்துடன் அவளுடன் பேச்சே கொடுக்காமல் அவளைச் சோதித்தாள். விஜயாவுக்கு டாக்டரின் போக்கைப் பார்த்துச் சிரிப்புத் தான் வந்தது. ''என்ன டாக்டர் ! என்னை கன்கிராஜுலேட்கூடப் பண்ணவில்லை. எனக்கு மூன்றாவதாகப் பெண் பிறந்தால் நீங்கள் எல்லாரும் ஏன் இப்படிச் சோகமயமாக இருக்கிறீர்கள் ? பெண் என்றால் இளப்பமா ? இந்தக் குழந்தையை ஆண் பிள்ளை மாதிரி வளர்த்துக் காண்பிக்கிறேன் !'' என்றாள்.

டாக்டர் தன் முகபாவத்தை நொடியில் மாற்றிக் கொண்டாள். ''நோ, நோ! அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. நீ வருத்தப் படுவாயோ என்றுதான் தயங்கினேன். உனக்குக் கொடுத்த குளோரோபார்ம் நெடி எனக்கே தாங்கவில்லை. பச்சைக் குழந்தைக்கு எப்படித் தாங்கும்? நாளைக் காலையில் குழந்தையை உனக்குக் காட்டுகிறோம். குட் கேர்ல்! சமர்த்தாக ஓய்வு எடுத்துக் கொள்!'' என்றாள்.

விஜயா ஒரு கணம் எங்கெல்லாமோ தன் கற்பனையில் போனாள். பெருமூச்சுடன், ''என்னவோ, டாக்டர் ! ஓரளவு எல்லாவற்றையும் என்னால் கிரகிக்க முடிகிறது. பெற்ற தாயிடம் குழந்தையை மூன்று நாளைக்குப் பிறகு காட்டுவது பெரிய அதிசயம்தான். என் கணவரோ என் பெண்களோ என்னை வந்து பார்க்கவில்லை. என் சிநேகிதி பத்மா கூட என்னைக் காண வரவில்லை. இங்கு என் தாய், நீங்கள், ஏன், நர்ஸ், ஆயா எல்லோருமே என்னைப் பரிதாபமாகப் பார்ப்பது நன்றாகத் தெரிகிறது. அந்தக் குழந்தை உயிரோடு இருக்கிறதா ? உயிரோடு இருந்தால் அந்த அதிசயக் குழந்தையை உடனே என்னிடம் காட்டுங்கள் !'' என்று நிதானமாக ஆணித்தரமாகச் சொன்னாள்.

டாக்டர் ஒரு கணம் ஸ்தம்பித்துப் போனாள். ''விஜயா ! உண்மையிலேயே நீ வெகு புத்திசாலி. நாளை காலைவரை பிடிவாதம் பிடிக்காதே. உன் குழந்தை உயிரோடு இருப்பது வெகு நிச்சயம். அந்த அதிசயக் குழந்தையை நாளை நானே கொண்டு வந்து காண்பிக்கிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே ஊசி போட்டாள். அடுத்த கணமே விஜயா ஆழ்ந்த நித்திரையில் மூழ்கினாள்.

**ம**று நாள் காலை. ராத்திரி படுத்துக்கொண்டிருந்த விஜயாவின் தாய்கூடப் பரக்கப் பரக்க வீட்டுக்குச் செல்ல முனைந்தாள். ''ஏம்மா, இத்தனை அவசரம்? மூன்று நாட்கள் கழித்து என் குழந்தையை எனக்குக் காட்டப் போகிற வைபவத்தை நீ பார்க்க வேண்டாமா ? இருந்துவிட்டுப் போயேன். இவருக்கு என்ன கோபம்? என்னை வந்து பார்க்கக்கூட இல்லை? குழந்தையையாவது பார்த்தாரா?'' என்று கேள்விகளாக அடுக்கினாள்.

தன் முக வாட்டத்தை மறைத்துக் கொண்டு, ''நன்றாக இருக்கிறது, உன் கற்பனையும் பேச்சும் ! வீட்டில் எனக்கு வேலை இல்லையா ? உனக்குச் சாப்பாடு போடப் பத்தியம் தயார் செய்து கொண்டு வரணும். அவர் தினமும் இரண்டு முறை உன்னையும் குழந்தையையும் பார்த்துவிட்டுப் போகிறார். நீதான் தூங்கிக் கொண்டிருக்கிறாய். சரி! நர்ஸ் உனக்கு உடம்பு துடைத்து உடையை மாற்றுவாள். நான் போய் எல்லாம் செய்து கொண்டு நொடியில் வந்துவிடுகிறேன்!'' என்று விறுவிறு என்று போய் விட்டாள் விஜயாவின் தாய்.

விஜயா நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். துணிச் சுருளில் நன்றாகச் சுருட்டி வைக்கப்பட்டிருந்த குழந்தையை விஜயாவிடம் காட்டினாள் டாக்டர். கழுத்துக்குக் கீழே நன்றாகப் போர்த்திச் சுற்றியிருந்தது. தன் சொப்பு வாயைத் திறந்து 'ஆ' என்று கொட்டாவி விட்டுவிட்டு வாயை மூடிக் கொண்டது. செம்பவழ உதடுகள். இமைகள் படபடக்கச் சின்னஞ் சிறு கண்களைத் திறந்து

## அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
## அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
## தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...

பட்டுப் போன்ற டால்க்...அன்பைப்போல மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில் ஆழ்த்தும் அருமையான புது நறுமணம் கொண்டது. அதுவே வெய்ல் ஆஃப் லவ். ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத் தாராளமாக மேனியெங்கும் தூவிக் கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம் நீண்ட நேரம் உங்களைத் தழுவி, உங்களைச் சுற்றிலும் கமகமவென வீசிக் கொண்டிருக்கும். வெய்ல் ஆஃப் லவ் உங்களை அலங்கரிக்-கட்டும். ஹேலோ மட்டுமே அளிக்கும் வாசமுள்ள அன்புத்திரை அது.

ஹேலோ வெய்ல் ஆஃப் லவ் டால்க் வாசமுள்ள அன்புத்திரை... அன்பைப் போல மிருதுவானது.

அவளுக்கு உகந்தது

# ஹேலோ

வெய்ல் ஆஃப் லவ்
டால்க்




HT.G.I.TH (K)

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*




**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social, economic, cultural.
* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.
* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**



**The Illustrated Weekly of India**

மூடியது. பெரிய ஆப்பிள் பழத்துக்கு அழகான கண்கள், சின்னஞ் சிறு நாசியுடன் அமுத வாயும் எழுதின மாதிரி லக்ஷணமாக இருந்தது.

ஒரு நொடியில் குழந்தையைப் பார்த்துப் பூரித்துத் திருப்தியும் அடைந்தாள் விஜயா. தலை நிறைய சுல்லாய்ப் போட்ட மாதிரி கருகருவென்ற தலை மயிர்.

'' இந்த ராஜாத்தியையா என்னிடம் மூன்று நாளைக்குப் பிறகு காட்டுகிறீர்கள். குழந்தையைத் தாருங்கள், டாக்டர் ! எனக்கு இது தலைப் பிரசவம் இல்லை டாக்டர். குழந்தையை நன்ருகத் தூக்கத் தெரியும்.''

'' உன் குழந்தையை உன்னிடம் கொடுக்காமல் நானு வைத்துக் கொள்ளப் போகிறேன் !'' என்று சொல்லி அங்கிருந்த நர்ஸுகள் ஆயாவைப் பார்த்தாள். அவர்கள் குறிப்பறிந்து கொண்டு அறையை விட்டு. வெளியே போனுர்கள். ஒரு கெட்டிக்கார நர்ஸ் போகும்போது அறையின் கதவைச் சாத்திக் கொண்டு போனுள். அறையில் டாக்டரும் விஜயாவும் டாக்டரின் மடியில் குழந்தையுமே இருந்தனர்.

'' விஜயா ! இப்பொழுதுதான் உன் மனத்தைத் திடப்படுத்திக் கொள்ள வேண்டும். சோதனைக்கு உள்ளாகிவிட்டாள் உன் பெண். இதோ பார்!'' என்று குழந்தையைச் சுற்றியிருந்த துணிச் சுருளை விலக்கினுள். விஜயா படபடக்கும் தன் மனத்தை அடக்கிக் கொண்டு குழந்தையைக் காலோடு தலை கூர்ந்து பார்த்தாள். அழகான கழுத்து. செக்கச் சிவந்த சிறு தொந்தி. வலது கையை வயிற்றில் ஒயிலாக வைத்திருந்த அழகு ஒன்று போதும். சின்னஞ் சிறு விரல்கள் இரத்தச் சிவப்பு; இரு தொடைகளும் பாதங்களும் சொல்லிச் செய்யச் சொன்ன மாதிரி இருந்தன. இடது கை ! துணிச் சுருளில் சிக்கிக் கொண்டிருந்த இடது கை ஏன் இது வரை கண்களில் படவில்லை. ஏதோ சந்தேகம் உறுத்த இடது கையைத் தூக்கினுள். 'வீல்' என்று அலறிவிட்டாள் விஜயா. இடது கை முழங்கை வரைக்கும் வலது கை மாதிரியே இருந்தது. அதற்குக் கீழே மணிக்கட்டு வரை சூம்பி அலங்கோலமான அவ லக்ஷணம். மணிக்கட்டுக்குக் கீழே ஒன்றுமே இல்லை. ''பிஞ்சு பிஞ்சான விரல்கள் எங்கே ? பகவானே ! உனக்கு இத்தனை ஞாபக மறதியா ? என்மேல் அவ்வளவு விரோதமா ?'' குலுங்கிக் குலுங்கி அழுதாள். தானே அழுது சமாதானமாகட்டும் என்று. டாக்டர் குழந்தையைத் தொட்டிலில் போட்டாள். ''விஜயா ! இனிதான் உன் மனத்தைத் திடப்படுத்திக் கொள்ள வேண்டும். குழந்தையை இங்கு விடலாமா? பார்த்துக் கொள்வாயா ?'' என்று அவளைத் தடவியவாறு கேட்டாள்.

விஜயா நிமிர்ந்து பார்த்தாள். ''டாக்டர்! உங்கள் சந்தேகம் புரிகிறது. கூனுனாலும் குருடானுலும் ஊனம் எதுவானுலும் அது என் குழந்தை. என் உயிரைக் கொடுத்தாவது அவளை . ஆளாக்குவேன். நீங்கள் என்னை நம்பி என் குழந்தையை என்னிடம் விட்டுப் போகலாம் !'' என்ருள். ஆணித்தர



''மாமி! உங்க பையன் தொட்டிலிலிருந்து கீழே குதித்து 'ஸ்ட்ரீகிங்'காகத் தெருவிலே ஓடுகிருன். சீக்கிரம் பிடியுங்கள் அவனை !''

மான அவள் பேச்சு டாக்டரை நிலை குலையச் செய்தது. தலையைக் குனிந்தவாறு அறையைவிட்டு வெளியேறினுள்.

சாயந்திரம் சேகர் வந்தவுடன், ''பகவான் நமக்குச் செய்த கொடுமையைப் பார்த்தீர்களா ?'' என்று விஜயா அழாமல் கேட்டது அவனுக்கே தடுமாறியது. அவன் தான் குலுங்கக் குலுங்க அழுதான். கண்ணீர் வறண்டதும் சொன்னுன்: விஜயா ! உன்னுடைய நிலைமை பெண்குலத்துக்கே ஒரு பாடம். கர்ப்பமாக இருக்கும்போது சிலர் தலையை வலிக்கிறது, காலை வலிக்கிறது என்று டாக்டர் ஆலோசனை இன்றிக் கண்ட கண்ட மருந்துகளைச் சாப்பிட்டு விடுகிருர்கள். அதனுல்தான் இப்படி நேர்கிறதாம். சில சமயம் மருந்து கேட்டு வரும் பெண் தான் கருவுற்றிருப்பதாகக் கூருததால் டாக்டரே கூடத் தவறு செய்யும்படியாகி விடுகிறது. இதையெல்லாம் சற்று முன் லேடி டாக்டர் கூறத் தெரிந்து கொண்டேன்.''

தொட்டில் போடவில்லை. காப்பு இடவில்லை. அம்மாவின் சிரிப்பையே பார்க்காத கீதாவும் சீதாவும் வாடிப் போனுர்கள்.

குழந்தையைப் பார்த்தபடி பிரமை பிடித்த மாதிரி உட்கார்ந்திருந்தாள் விஜயா.

''ஏம்மா, கவலைப்படறே ? இவள் பெரியவளானதும் இடது பக்கம் பை வைத்துக் கவுன் தைச்சுட்டா கையைப் பையில் போட்டுடலாம்!'' என்று யோசனை சொன்ன கீதாவை இறுக அணைத்துக் கொண்டாள் விஜயா.

சீதா தன் பெரிய விழிகளை உருட்டி வலது கை ஆள் காட்டி விரலை ஆட்டிக் கொண்டு, ''என் தங்கையைப் பற்றி யாராவது சொல்லட்டும். பிச்சுவிடுவேன்!'' என்ருள். பிறகு, ''நான் அவளைப் பார்த்துக் கொள்கிறேன் அம்மா, நீ கவலைப்படாதே !'' என்று தாயைத் தேற்றினுள்.

''ஆமாண்டா, கண்களா! நம் குழந்தை! எதிர்நீச்சல் போட்டு அவளை வளர்த்தே ஆக வேண்டும் !'' என்ருள் விஜயா. சேகர் கண்களைத் துடைத்துக் கொண்டான்.




## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

# மொட்டு வெடித்தது!

தடாகத்தில் ஓர் அழகிய தாமரை மொட்டு தண்ணீருக்கு மேல் தலைதூக்கி நின்றது. அதன் குவிந்த இதழ்களுக்குள்ளே நறுமணம் ததும்பிக் கொண்டிருந்தது. இரவெல்லாம் அந்த நறுமணம் வெளியில் வருவதற்கு முயன்று நாற்புறமும் மோதிப் பார்த்தும் வெளியில் வர முடியாதபடியால் உள்ளுக்குள்ளேயே குமுறிக் கொண்டிருந்தது. தாமரை மொட்டுக்கும் அது மிக்க வேதனை அளித்தது.

உதய நேரத்தில் நறுமணத்தின் குமுறலும் மோதலும் அதிகமாயின. திடீரென்று கீழ் வானத்தில் ஒரு ஜோதி தோன்றியது. உதய சூரியனின் அமுதனைய கிரணங்கள் தடாகக் கரையில் இருந்த விருட்சங்களின் இடையே நுழைந்து வந்து தாம்ரை மொட்டைத் தொட்டன. அந்த இனிய ஸ்பரிசத்தினால் மொட்டு சிலிர்த்தது; இதழ்கள் விரிந்தன. இரவெல்லாம் உள்ளே விம்மிக் கொண்டிருந்த நறுமணம் விடுதலையடைந்து தடாகத்தையும் தடாகக் கரையையும் வான வெளியையும் நிறைத்தது.

அவ்விதமே சிவகாமியின் இதயமாகிற தாமரை மொட்டுக்குள்ளே இத்தனை நாளும் விம்மிக் குமுறிக் கொண்டிருந்த எண்ணங்களும் உணர்ச்சிகளும் மாமல்லரிடம் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்ததும் கரையை உடைத்துக் கொண்ட ஏரி வெள்ளத்தைப்போலப் பிரவாகமாய்ப் பெருகின. மாமல்லர் முதன் முதலில் அரண்ய வீட்டுக்கு வந்ததைக் குறிப்பிட்டபோது தான் சிவகாமியின் வார்த்தைப் பிரவாகம் தடைப்பட்டது.

அப்போது கிடைத்த சந்தர்ப்பத்தை மாமல்லர் பயன்படுத்திக் கொண்டு கூறினார்: ''ஆம்! எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது. நானும் சக்கரவர்த்தியும் முதன் முதலில் உங்கள் அரண்ய வீட்டுக்கு வந்தபோது உன் தந்தையின் தெய்வச் சிலைகளுக்கு மத்தியிலே நீ நடனமாடிக் கொண்டிருந்தாய். ஆயனர் ஸ்வரக் கோவை பாடிக் கொண்டும் தாளம் போட்டுக் கொண்டும் இருந்தார். எங்களைக் கண்டதும் ஆயனர் பாட்டையும் தாளத்தையும் நிறுத்தினார். நீயும் ஆட்டத்தை நிறுத்தினாய். உன்னுடைய விரிந்த கண்கள் இன்னும்

மலருமாறு விழித்து எங்களை நோக்கினாய். என் தந்தை 'நிறுத்த வேண்டாம்; ஆட்டம், நடக்கட்டும்!' என்று வற்புறுத்தினார். அதன் மேல் ஆயனர் பாடத் தொடங்க, நீயும் ஆடத் தொடங்கினாய். ஆட்டம் முடிந்ததும் நான் பலமாகக் கரகோஷம் செய்தேன். நீ மகிழ்ச்சி ததும்பிய கண்களினால் என்னை ஏறிட்டுப் பார்த்தாய். அந்தப் பார்வையில் நாணம் என்பது அணுவளவும் இருக்கவில்லை.''

"பிரபு! தாங்கள் கூறியதெல்லாம் உண்மைதான். அப்போது நான் பன்னிரண்டு பிராயத்துப் பெண். உலகம் அறியாதவளா யிருந்தேன். தாங்கள் வானத்தில் ஜோதி மயமாய்ப் பிரகாசிக்கும் சூரியன் என்பதையும், நான் கேவலம் பூமியில் புல் நுனியில் நிற்கும் அற்பப் பனித் துளி என்பதையும் அறியாதவளா யிருந்தேன். ஆகையால் தங்களை ஏறிட்டுப் பார்க்கச் சிறிதும் தயக்கமடையவில்லை. சூரியனை ஏறிட்டுப் பார்க்கத் துணியும் கண்கள் கூடிய சீக்கிரத்தில் கூசிக்குனிய நேரிடுமென்று அறியாமல் போனேன்...''

''சிவகாமி! நான் சூரியனுமல்ல; நீ பனித் துளியுமல்ல. நீ தீபச் சுடர்; நான் அதைச் சுற்றிச் சுற்றி வரும் விட்டில்!....''

''பிரபு! நான் சொல்ல ஆரம்பித்ததை விட்டு வேறு விஷயத்துக்குப் போனது தவறுதான். மன்னியுங்கள். நான் ஆடி நிறுத்தியதும் நீங்கள் கரகோஷம் செய்தீர்கள். எனக்கு அப்போது உண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. உங்கள் தந்தை உங்களைப் பார்த்து, 'சிவகாமியோடு சற்று நேரம் விளையாடிக் கொண்டிரு; ஆயனரோடு பேசியான பிறகு உன்னைக் கூப்பிடுகிறேன்' என்றார். நீங்கள் உடனே என் அருகில் வந்தீர்கள். இருவரும் கைகோத்துக்கொண்டு காட்டுக்குள்ளே குதித்தோடினோம்.

''காட்டிலே நான் பார்த்து வைத்திருந்த அழகான இடங்களையும் செடி கொடிகளையும் காட்டியான பிறகு தங்களை வீட்டுக்குள்ளே அழைத்துச் சென்று நான் வளர்த்து வந்த கிளிகளையும் புறுக்களையும் காட்டினேன். நடன வடிவச் சிலைகளைப் பார்க்கும்போது தாங்கள், 'நானும் நடனக் கலை பயில விரும்புகிறேன்' என்றீர்கள். அந்தச் சிலைகளில் ஒன்றைப் போல் அபிநயத் தோற்றத்தில் நின்றீர்கள். அதைப் பார்த்துவிட்டு நான் குபீரென்று சிரித்தேன். 'குழந்தைகள் அதற்குள்ளே வெகு சிநேகமாகி விட்டார்களே!' என்று நம் தந்தைமார் பேசிக்கொண்டார்கள்.

''அன்று முதல் தங்களுடைய வருகையை நான் ஆவலுடன் எதிர்பார்க்கலானேன். குதிரையின் சத்தமோ ரதத்தின் சத்தமோ கேட்கும்போதெல்லாம் தாங்கள்தான் வந்துவிட்டீர்கள் என்று என் உள்ளம் துள்ளி மகிழ்ந்தது. உதய சூரியனையும், பூரணச் சந்திரனையும், வண்ண மலர்களையும் பாடும் பறவைகளையும் பறக்கும் பட்டுப் பூச்சிகளையும் பார்க்கும்போது எனக்கு உண்டான குதூகலம் தங்களைப் பார்க்கும் போது உண்டாயிற்று. ஆனால், சூரிய சந்திரர்களிடமும், புஷ்பங்கள், பட்சிக



ளிடமும் பேச முடியாது. தங்களிடம் பேசுவது சாத்தியமா யிருந்தபடியால், தங்களைக் கண்டதும் பேச ஆரம்பித்தவள் மூச்சு விடாமல் பேசிக் கொண்டே யிருப்பேன்....''

''உண்மைதான், சிவகாமி! அந்த நாளில் உன்னைப் பார்க்கும்போது, உன் தந்தையின் அற்புதச் சிலைகளில் ஒன்றைப் பார்ப்பது போன்ற மகிழ்ச்சி எனக்கு உண்டாகும். ஆனால் சிலை பேசாது; ஆனால் நீயோ ஓயாமல் பேசுவாய். பறவைகளின் குரல் ஒலிகளில் எவ்வளவு பொருள் உண்டோ, அவ்வளவு பொருள்தான் உன் பேச்சுக்களிலும் இருப்பதாக எனக்குத் தோன்றும். ஒன்றும் புரியாவிட்டாலும் நெடு நேரம் கேட்டுக் கொண்டிருப்பேன்....'

''என் பேச்சைப் போலவேதான் நம் சிநேகமும் அப்போது அர்த்தமற்றதா யிருந்தது. கொஞ்ச நாளைக்கெல்லாம் தாங்கள் சக்கரவர்த்தியுடன் தேச யாத்திரை சென்றீர்கள். அப்புறம் மூன்று வருஷ காலம் அரண்ய வீட்டுக்கு நீங்கள் வரவில்லை. மறுபடியும் எப்போதுமே தங்களைப் பார்க்க மாட்டோமோ என்ற ஏக்கம் எனக்குச் சிற்சில சமயம் உண்டாகும். இல்லை, தாங்கள் எப்படியும் ஒருநாள் வருவீர்கள் என்ற தைரியம் அடைவேன். தாங்கள் வருவதற்குள்ளே நடனக் கலையிலே சிறந்த தேர்ச்சி யடைந்துவிட வேண்டும் என்றும், தாங்கள் திரும்பி வந்ததும் அற்புதமாய் ஆட்டம் ஆடித் தங்களைத் திகைக்கச் செய்ய வேண்டுமென்றும் எண்ணுவேன். தாங்கள் மீண்டும் வரும்போது தங்களுடைய உருவம் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பார்க்க அடிக்கடி முயல்வேன். ஆனால், மனத்தில் உருவம் ஏதுவுமே வராது... கடைசியாக ஒரு நாள் தாங்களே வந்து விட்டீர்கள்! முற்றும் புதிய மனிதராய் வந்தீர்கள்!''

''நீயும் வெகுவாக மாறிப் போயிருந்தாய், சிவகாமி! உருவத்திலும் மாறியிருந்தாய்; குணத்திலும் மாறியிருந்தாய். நான் எதிர்பார்த்தது போல் என்னைக் கண்டதும் நீ ஓடி வந்து என் கரங்களைப் பற்றி வீட்டுக்குள் அழைத்துப் போகவில்லை. தூண் மறைவிலே நாணத்துடன் நின்று கடைக் கண்ணால் என்னைப் பார்த்தாய். 'கலகல'வென்று



சிரிப்பதற்கு மாறாகப் புன்முறுவல் செய்தாய்! அந்தக் கடைக் கண் பாணமும் கள்ளப் புன்னகையும் என்னைக் கொன்றன.''

''ஓடி வந்து முகமன் கூறி உங்களை வரவேற்க முடியாமல் ஏதோ ஒன்று என்னைத் தடை செய்தது. முன்னால் வரலாமென்றால் கால் எழவில்லை. ஏதாவது பேசலா மென்றால் நா எழவில்லை. நின்ற இடத்திலேயே நின்றேன். என்னை நானே, 'சிவகாமி! உனக்கு என்ன வந்து விட்டது?' என்று கேட்டுக்கொண்டேன். அதே சமயத்தில் அப்பாவும் 'சிவகாமி! ஏன் தூண் மறைவில் நிற்கிறாய்? வந்து சக்கரவர்த்திக்கு நமஸ்காரம் செய்! பல்லவ குமாரரைப் பார்! எப்படி ஆஜானுபாகுவாய் வளர்ந்திருக்கிறார்?' என்றார். நான் தயக்கத்துடன் வந்து நமஸ்காரம் செய்தேன். அப்போது சக்கரவர்த்தி, 'ஆயனரே! சிவகாமியும் வளர்ந்துபோயிருக்கிறாள்! முதலில் எனக்கு அடை



யாளமே தெரியவில்லை. கற்சிலை செய்வதோடு நீர் தங்கச் சிலையும் செய்ய ஆரம்பித்து விட்டீரோ என்று நினைத்தேன்' என்றார். இதனால் என்னுடைய நாணம் இன்னும் அதிகமாகி விட்டது. சற்று நேரம் பேசாமல் நின்றுவிட்டு அப்புறம் வீட்டிலிருந்து நழுவிக் காட்டுக்குள்ளே சென்றேன். தாமரைக் குளக்கரையில் உட்கார்ந்து எனக்கு என்ன வந்து விட்டது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

''சற்று நேரத்துக்கெல்லாம் என் பின்னால் மிருதுவான காலடிச் சத்தம் கேட்டது. ஆனால் நான் திரும்பிப் பார்க்கவில்லை. தாங்கள் வந்து என் கண்களைப் பொத்தினீர்கள். மூன்று வருஷங்களுக்கு முன்னால் இப்படிக் கண்களைப் பொத்தும்போது நான் உங்கள் பெயரைச் சொல்லிக் 'கலகல'வென்று சிரித்துக் கைகளைத் தள்ளி விட்டுத் திரும்பிப் பார்ப்பேன். இப்போது தங்களுடைய கரங்கள் என் கண்களை மூடியபோது, என் தேகம் செயலற்று ஸ்தம்பித்தது. என் உள்ளத்திலோ ஆயிரக் கணக்கான அலைகள் எழுந்து விழுந்து அல்லோலகல்லோலம் செய்தன.

''பிறகு நீங்கள் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து என் கையை உங்கள் கையோடு கோத்துக் கொண்டீர்கள். நான் செயலற்றுச் சும்மா இருந்தேன். 'சிவகாமி! என் பேரில் கோபமா?' என்றீர்கள். நான் மௌனமாக உங்களைப் பார்த்தேன். 'ஆமாம், கோபந்தான் போலிருக்கிறது!' என்று கூறி, தங்களுடைய யாத்திரையைப் பற்றி ஏதேதோ சொல்லிக் கொண்டே போனீர்கள். ஆனால், நீங்கள் சொன்னது ஒன்றும் என் காதில் ஏறவேயில்லை. 'நீங்கள் என் அருகில் உட்கார்ந்திருக்கிறீர்கள். நம் இருவருடைய கரங்களும் ஒன்றுபட்டிருக்கின்றன' என்னும் ஓர் உணர்ச்சிதான் என் மனத்தில் இருந்தது. அந்த நினைவு என்னை வான வெளியிலே தூக்கிக் கொண்டு போய் மேக மண்டலங்களின் மேல் மிதக்கச் செய்தது. தடாகத்துத் தண்ணீரில் மிதக்கும் தாமரை இலைகளின் மேலே நின்று என்னை நடனமாடச் செய்தது. தண்ணீருக்குள்ளே அமுக்கிக் கீழே கீழே கொண்டு போய் மூச்சுவிட முடியாமல் என்னைத் திக்குமுக்காடச் செய்தது.''

''என்னை எத்தகைய அசடாகச் செய்துவிட்டாய் நீ! நான் சொன்னதை யெல்லாம் வெகு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்ததாக எண்ணி அல்லவா என் யாத்திரை அநுபவங்களை யெல்லாம் உனக்குச் சொல்லிக் கொண்டிருந்தேன்?''

''கடைசியாக, நீங்கள் விடை பெற்றுச் சென்றபோது, 'சீக்கிரத்தில் திரும்பி வருவேன்' என்று சொல்லி விட்டுச் சென்றீர்கள். அப்புறம் சில காலம் நான் தரையிலே நடக்கவேயில்லை. ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டேயிருந்தேன். என் வாழ்க்கையில் ஒரு மகத்தான அதிசயம்—அபூர்வமான புதுமை — யாருக்கும் கிடைக்காத அற்புதமான பாக்கியம் கிடைத்து விட்டதாகத் தோன்றியது. அதனால் என் கண்களுக்கு உலகமே புதிய தோற்றம் கொண்டது. வானத்திலும் பூமியிலும் அது வரை காணாத வனப்புக்களை யெல்லாம் கண்டேன். மல்லிகையும் முல்லையும் செண்பகமும் அதற்குமுன் நான் என்றும் அறியாத நறுமணத்தை அளித்தன. நீலவானம் புதிய மெருகுடன் பிரகாசித்தது. பட்சிகளின் கானத்தில் புதிய இனிமை தென்பட்

டது. மூங்கில் காடுகள் காற்றில் அசையும் போது உண்டாகும் சத்தம் முன்னெல்லாம் அழுகைச் சத்தமாக எனக்குத் தோன்றும். இப்போது அதுவே ஆனந்த கீதமாக என் காதில் ஒலித்தது. செடிகளும் கொடிகளும் பட்சிகளும் பூச்சிகளும் ஆயிரம் ஆயிரம் குரல்களில், 'சிவகாமி! நீ கொடுத்து வைத்தவள்; பாக்கியசாலி' என்று ஆதரவோடு சொல்வதாகத் தோன்றியது. இரவிலே வானத்து நட்சத்திரங்கள் முன் எப்போதையும்விடக் குதூகலமாக என்னைப் பார்த்துச் சிரித்தன. வெண்மதியாகிய தந்தத் தோணியின் மேலே அமர்ந்து வானக் கடலில் அந்த விண்மீன்களிடையே சுற்றி வந்தபோது, இப்போது நான் தனியாகச் சுற்றவில்லை; தோணியில் என் அருகில் நீங்களும் வீற்றிருந்தீர்கள்! எல்லையற்ற உள்ளக் கடலிலே தாலாட்டிய சிந்தனை அலைகளுக்கு மத்தியில் மிதந்த வாழ்க்கைத் தெப்பத்தில் நான் மட்டும் தனியாக இருக்கவில்லை; பக்கத்தில் தாங்களும் இருந்தீர்கள். அப்போதெல்லாம் எனக்குத் தானாகவே பாட்டுப் பாடத் தோன்றியது. ஆட்டத்தில் அளவில்லாத உற்சாகம் உண்டாயிற்று. நடனக் கலையில் நான் அடைந்த துரிதமான அபிவிருத்தியைக் கண்டு என் தந்தையே பிரமித்துப் போனார்.....''

''சக்கரவர்த்தியும் நானும்கூடத் தான் அதிசயம் அடைந்தோம். பரத சாஸ்திரம் எழுதிய முனிவருக்கே எட்டாத நடனக் கலை விந்தைகளெல்லாம் உன் ஆட்டத்தில் வெளியாவதாக என் தந்தை அடிக்கடி சொன்னார். காஞ்சிமா நகரில் இராஜ சபையில் அரங்கேற்றம் நடத்த வேண்டும் என்று அவர்தான் வற்புறுத்தினார்!''

''பிரபு! அந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த அரங்கேற்றம் நடக்கும் சமயத்தில் என் மன நிலை மாறிவிட்டது. அந்த மாறுதலை நினைத்தால் எனக்கே அதிசயமா யிருக்கிறது. மூன்று வருஷப் பிரிவுக்குப் பிறகு தங்களைப் பார்த்ததும் எனக்குண்டான சந்தோஷம், குதூகலம் எல்லாம் சில நாளைக்குள் எங்கேயோ போய்விட்டன. வரவர, தங்களுடைய நினைவு எனக்கு மகிழ்ச்சியை அளிப்பதற்கு மாறாகத் துன்பத்தைத் தர ஆரம்பித்தது. எதைப் பார்த்தாலும் பிடிக்காமல் போய்விட்டது. சந்திரனும் நட்சத்திரங்களும் வெறுப்பை அளிக்கத் தொடங்கின. பொழுது விடிந்தால் ஏன் விடிகிறது என்று தோன்றியது. பூக்களைக் கண்டால் கசக்கி எறியத் தோன்றியது. என்

---

தங்களது ஏப்ரல் 21ந் தேதி 'கல்கி' இதழை வழக்கம் போல் படித்துப் பார்த்தேன். அதில், 'வயதுக் கோளாறு' என்கிற குட்டித் தலைப்பில் என்னைப் பற்றிய தவறான தகவலொன்று இடம் பெற்றிருப்பதைச் சுட்டிக் காட்டிட விரும்புகிறேன்.

புதுதில்லி
23—4—74

வலம்புரி ஜான்
பி. ஏ., பி. எல்.
ராஜ்யசபை உறுப்பினர்

(''தமிழ்நாட்டிலே...'' பகுதியில் வெளி வந்துள்ள அந்தத் தகவல் தவறு என்று சுட்டிக் காட்டியுள்ள பாராளுமன்ற உறுப்பினர் திரு வலம்புரி ஜான் அவர்களுக்கு நன்றி. -ஆசிரியர்.)

---

கண்களிலிருந்து தூக்கம் மாயமாய்ப் போய்விட்டது. அருமையாக வளர்த்த மான் குட்டியையும் கிளியையும் வெறுக்கத் தொடங்கினேன். நடனக் கலையிலே கூட எனக்கு ஆசை குன்றத் தொடங்கியது. 'ஆட்டமும் பாட்டமும் என்ன வேண்டிக் கிடக்கிறது?' என்று எண்ணத் தொடங்கிவிட்டேன். இந்தச் சமயத்திலேதான் அரங்கேற்றம் நடந்தது; அபசகுனம் போல் அது நடுவில் நின்று போனதில் எனக்குத் திருப்தியே உண்டாயிற்று.''

''அரங்கேற்றத்துக்குப் பிறகு தாமரைக் குளக் கரையில் நாம் சந்தித்த போதும் நீ ஒரு மாதிரி வருத்தத்துடனே தான் பேசினாய். என்னிடம் வாக்குறுதி கேட்டாய்! எனக்கு அதெல்லாம் பெருவியப்பா யிருந்தது....''

''பிரபு! அச்சமயம் தங்களுடைய திருமணத்தைப் பற்றிய பிரஸ்தாபம் என் காதில் விழுந்தது. ஏற்கனவே வேதனைக்குள்ளாயிருந்த என் உள்ளத்தில் அது வேலினால் குத்துவது போல் இருந்தது. தாங்கள் எனக்கே முழுதும் உரியவராயிருக்க வேண்டும் என்று கருதினேன். தங்களைப் பார்க்காமல் ஒரு கணம் போவது ஒரு யுகமாயிருந்தது. என்னுடைய தூண்டுதலினாலே தான் என் தந்தை காஞ்சிக்கு நாவுக்கரசர் பெருமானைப் பார்ப்பதற்கு வந்தார். அன்று நடந்ததைத் தாங்கள் அறிவீர்கள்.....''

''அன்று நடந்ததை மட்டும் அல்ல, சிவகாமி! உன் உள்ளத்தின் நிலைமையையும் அன்றைக்குத் தெரிந்து கொண்டேன். அதனால்தான் மறு நாளே கண்ணபிரானிடம் ஓலை கொடுத்து அனுப்பினேன்.''

''அந்த ஓலையிலிருந்து நான் காஞ்சிக்கு வருவது தங்களுக்கு விருப்பமில்லை

**கோடையில்—**
**சாதாரணமான சருமம்...**
**...வாடிவிடும் வியர்க்குருவினுல்..**






நைஸில்*
கிளாக்ஸோ தயாரிப்பு

*டிரேடு மார்க்

**காலையிலே குளித்தபின்...**
**மேனிமீது தூவித் தெளிப்பீர்**
**நைஸில் பவுடரை**



**வேர்க்குரு என்றால்**
**வீசை என்ன விலை**
**என்று கேட்பீர்கள்!**

அபரிமிதமான வியர்வையினுல் சருமத் துவாரங்கள் அடைபடும் போது, யாரும் வியர்க்குருவினுல் அவதிப் படுவார்கள் என மருத்துவ ஆராய்ச்சிகள் காட்டுகின்றன, எரிச்சலும் அரிப்பும் ஏற்படுகின்றன; சருமம் பாதிக்கப் படுகிறது. இதனை எதிர்த்துப் போராடும் குளோர் பென்னின் மற்றும் போரிக் பவுடர் அடங்கியது நைஸில் 'ப்ளூ' ஒன்றுதான்-அதோடு உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்புத் தரும் ஸிங்க் ஆக்ஸைடும் அதில் அடங்கியுள்ளது.

# சரணாலயம்

**கா**ட்சி மாற்றங்கள், விளக்கணைப்புக்கள் ஏதுமில்லாமல் ஒரே செட்டில் ஒரு நாடகம். ஒரே ஒரு பெண் பாத்திரம்தான். அவள் நாடக ஆரம்பத்திலிருந்து முடிவு வரை ஒவ்வொரு காட்சியிலும் வருகிறாள். அந்த ஒரு பாத்திரத்தைச் சுற்றித்தான் கதையே. கதையோ மர்மக் கதை... நாடகம் புதுமையாகவும் விறுவிறுப்புடனும் இருந்திருக்கும் என்பதைச் சொல்லவா வேண்டும்?

மகேஷ் என்பவன் தன் மனைவி மாற்றானுடன் இருப்பதைக் கண்டு சந்தேக வெறியில் கொலை செய்து விடுகிறான். போலீஸ் துரத்தி வருகிறது. ஒரு வீட்டுக்குள் நுழைந்து புகலிடம் கேட்கிறான். அது இன்ஸ்பெக்டர் திருஞானத்தின் வீடு என்றும் அவன் உதவி கேட்டது அவரது ஒரே மகள் சுமதியிடம் என்றும் அவனுக்குத் தெரியாது. தனது ஒரே மகளின் கல்யாணத்தைக் காண முடியாமல் தன்னைப் போலீஸ் துரத்தி வருகிறதென்று மகேஷ் கெஞ்ச, இரக்கப்பட்டு ஒளிந்து கொள்ள இடம் தந்து விடுகிறாள் சுமதி. இதன் பிறகுதான் அவளுக்குத் தொல்லைகள் அடுக்கடுக்காக வருகின்றன. கொலைகாரனைத் தேடி அப்பா — இன்ஸ்பெக்டர் வருகிறார். கொலைகாரனைத் தம் மகள் அதே வீட்டில் ஓர் அறையில் ஒளித்து வைத்திருப்பது அவருக்குத் தெரியாது. ஒவ்வொரு முறையும் மகேஷை வெளியே அனுப்பிவிடச் சுமதி முயற்சி செய்யும் போதெல்லாம் அது முடியாமல், வீட்டுக்கு யார் யாரோ வருகிறார்கள். அவர்களைச் சமாளித்து அனுப்புவதற்கு அவள் பாடாகப் படுகிறாள். போலீஸ் ஜவான், நாட்டியம் சொல்லித் தரும் நட்டுவனார், காதலன், சம்பந்தம், ஒரு கல்யாணத் தரகர் — இப்படி அடுத்தடுத்து வரும் ஒவ்வொருவரின் சம்பாஷணையிலேயே கதையை விளக்கிக் கொண்டு போயிருப்பது நல்ல உத்தி. கொலைகாரனை ஒளித்து வைத்துள்ள அறைக்குள்ளேயே அப்பா போவதும் அங்கிருந்து துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்பதோடு இடைவேளை விடுவதும் நல்ல சஸ்பென்ஸ். சம்பவங்களைத் திறமையாகப் பின்னிக் கொண்டு போயிருக்கும் அளவுக்குக் கதையில் வலு இல்லை. தன் மனைவி 'அண்டர்கிரவுண்டு' ஆசாமியான தன் அண்ணனோடு பேசிக் கொண்டிருப்பதைக் கணவன் தவறாகப் புரிந்து கொண்டு கொலை செய்வது ரொம்ப ரொம்பப் பழைய விஷயம்.

சாரதாலயாவின் சரணாலயம் கச்சிதமாக இரண்டே மணி நேரத்தில் முடிந்துவிடுவது பாராட்டுக்குரியது.

முக்கிய நடிகர்கள் எல்லாருமே பாத்திரமுணர்ந்து சிறப்பாகச் செய்திருக்கிறார்கள். கதையில் வலு குறைந்தாலும் நடிப்பும் நாடகமும் உள்ளனவே, போதாதா! **—கௌசிகன்**

---

யென்று அறிந்தேன். தங்களைப் பார்க்காமல் நான் கழித்த எட்டு மாதமும் எனக்கு எட்டு யுகமாயிருந்தது. நாளுக்கு நாள் என் மன வேதனையும் நெஞ்சு வலியும் அதிகமாகி வந்தன. தங்களிடமிருந்து ஓலை வந்த இரண்டொரு தினங்கள் சிறிது உற்சாகமாயிருப்பேன். பிறகு துன்பம் அதிகமாகி விடும். தங்களை ஒருநாளும் இனிப் பார்க்கப் போவதில்லை என்றும், என்னுடைய பகற் கனவு ஒருநாளும் நிறைவேறப் போவதில்லை என்றும் தோன்றும். 'இப்படி எதற்காக உயிர் வாழ வேண்டும்? இந்த வாழ்நாளை முடித்துக் கொள்ளலாம்' என்று அடிக்கடி எண்ணமிடத் தொடங்கினேன். இப்படியே கொஞ்ச நாள் இருந்தால் எனக்குப் பைத்தியமே பிடித்துவிடலாம் என்று அடிக்கடி தோன்றியது. பிரபு! தங்களுடைய விருப்பத்தின்படி அரண்ய வீட்டிலேயே காத்திராமல் ஏன் யாத்திரை கிளம்பி வந்தேன் என்று இப்போது தெரிகிறதா?'' என்று சிவகாமி முடித்தாள்.

''தெரிகிறது, சிவகாமி! தெரிகிறது! இப்படிப் பிரளய வெள்ளத்திலே அகப்பட்டுக் கொண்டு இரண்டு பேரும் திண்டாட வேண்டும், இந்த ஜன சூன்யமான ஏகாந்தத் தீவிலே வந்து ஒதுங்க வேண்டும் என்பதற்காகத்தான்! இது தெரியாதா, என்ன?'' என்று மாமல்லர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்தத் தீவைப் பற்றிய அவருடைய வார்த்தையைப் பொய்ப்படுத்திக் கொண்டு சற்றுத் தூரத்தில் வாத்திய கோஷங்களும் ஜனங்களின் ஆரவார ஒலிகளும் கேட்டன. இருவரும் திடுக்கிட்டு எழுந்திருந்தார்கள். (தொடரும்)

# நாற்றம் போகிறது; நகரம் பொலிகிறது!

ஓர் அலுவல் நாளில் மாலை நாலு மணியளவில் மாநகராட்சி இயங்கும் ரிப்பன் கட்டடத்துக்குள் நுழைகிறோம். கட்டடத்துக்கு வெளியேயும், உள்ளேயும் ஏன் — தாழ்வாரங்களிலும்கூடத்தான் — நிலவும் அமைதியான சூழ்நிலை நம்மை வியப்பில் ஆழ்த்து



மல ஜலம் கழிக்குமிடம்....

அன்றும்....



....இன்றும்!

கிறது. இப்படியா இருக்கும் முன்பெல்லாம்? மூலைக்கு மூலை சிறு சிறு கும்பல்கள், பேச்சு, கூச்சல் — இப்படி 'ஜேஜே' என்றிருந்த நிலை மாறி அலுவலகப் பணி அமைதியாக நடைபெறுகிறது! கடந்த டிசம்பர் முதல் தேதி திரு டி. வி. அந்தோனி ஐ.ஏ.எஸ். நகராட்சியின் நிருவாகப் பொறுப்பினை மேற்கொண்ட பின்னர், மாநகராட்சியின் பணிகள் கட்டடத்துக்கு உள்ளே மட்டுமின்றி நகரம் முழுவதுமே பரவலாகப் பாராட்டுமளவுக்குச் சீர்ப்பட்டுள்ளன.

மக்களிடமிருந்து வசூலிக்கப்படும் வரிப்பணம் மக்களின் நலனுக்காகச் செலவிடப்பட வேண்டும் என்பது அடிப்படை விதி. ஆனால் வரிப்பணமே சரிவர வசூலிக்கப்படவில்லையென்றால் நிருவாகம் எப்படி நடைபெறும்?

கடந்த ஆண்டு, வீட்டு வரி முதலிய பல்வேறு வரிகளுமாகச் சேர்த்து வசூலிக்கப்பட்ட தொகையைவிட நடப்பு ஆண்டில் 2.15 கோடி ரூபாய் கூடுதலாக வசூலிக்கப்பட்டுள்ளது. 1970–71ல் வசூலிக்கப்பட்ட தொகையைவிட 3.63 கோடி ரூபாய் நடப்பு ஆண்டில் அதிக வசூல். இதிலிருந்து முந்தைய ஆண்டுகளில் வசூலிக்கப்படாத நிலுவை எவ்வளவு என்பதும் புரிகிறதல்லவா? வரவு ஒழுங்காக இருந்தால்தானே பல்வேறு இனங்களுக்குச் செலவு செய்யவும் உரிய தொகைகளை ஒதுக்கீடு செய்ய முடியும்? விசேஷ அதிகாரியின் விசேஷ கவனம் பாராட்டுக்குரியது.

அரசியல் சாசனம் அளித்த சுதந்திரங்கள் ஒவ்வொன்றாகப் பறிபோய்க் கொண்டிருக்கும் நிலையிலும் நமது மக்கள் தெருக்களை அசுத்தம் பண்ணும் ஒரு சுதந்திரத்தை மட்டும் விட்டுக் கொடுக்காமல் இருக்கிறார்கள்! ஆனால் இவ்வாறு நாம் மிஸ்டல் செய்வதைக்கூட திரு அந்தோனி விரும்பமாட்டார். மனிதாபிமானத்துடன் பிரச்னையை அணுகுகிறார் அவர்.

கக்கூஸ் வசதி போதிய அளவு சென்னை நகரில் இல்லை என்பதை உணர்ந்து மேலும் இருபத்தைந்து கக்கூஸ்களை நடப்பு ஆண்டில் கட்டத் திட்டமிட்டுள்ளதாகக் கூறுகிறார். கக்கூஸுக்கு வெளியே பலர் அசுத்தம் செய்கிறார்களே, ஏன் என்று ஆராயும் பொருட்டுப் பொதுக் கக்கூஸ்களில் எல்லாம் இந்த அதிகாரி உள்ளே நுழைந்து பார்த்தாராம். "பல இடங்களில் 'பேசின்' உடைந்திருந்தன. சில கக்கூஸ்களில் தண்ணீர் வசதி இல்லை. அது காரணம் பற்றியே பல பொதுக் கக்கூஸ்கள் சுத்தம் செய்யப்படுவதில்லை. இதன் விளைவாகவே மக்கள் கக்கூசுக்கு வெளிப்புறங்களில் அசுத்தம் செய்வது வழக்கமாகியுள்ளது. நகராட்சியின் கீழுள்ள 415 பொதுக் கக்கூஸ்களில் தொண்ணூறு கக்கூஸ்கள் பிப்ரவரி மாதத்தில் சுமார் ஒன்றரை லட்ச ரூபாய் செலவில் பழுதுபார்க்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கக்கூசிலும் அதனைச் சுத்தம் செய்ய வேண்டிய தொழிலாளியின் பெயர் இப்போது எழுதி வைக்கப்பட்டுள்ளது. சமீபத்தில் செப்பனிட்டு வெள்ளையடிக்கப்பட்ட கக்கூஸ் ஒன்றின் வெளிப்புறச் சுவரில்..... இதோ, நீங்களே பாருங்கள்!" என்று ஒரு புகைப்படத்தை நீட்டுகிறார் திரு அந்தோனி. பளிச்சென்று வெள்ளையடிக்கப்பட்ட சுவரில் கரேலென்று [illegible] ஓர் அரசியல் கட்சியின் மாநாடு விளம்பரப்படுத்தப்பட்டிருக்கிறது.

நகராட்சி மன்றம் அளிக்கும் இது போன்ற பொது வசதிகளைப் பேணிப் பாதுகாக்கும் பொறுப்பு மக்களுக்கு உண்டு என்பதை மறப்பவர்களை எப்படி மன்னிப்பது!

''அன்றாடம் தெருக்களைக் கூட்டிச் சுத்தம் செய்யும் பணியில் சுமார் 6000 தொழிலாளிகள் ஈடுபட்டுள்ளனர். ஒவ்வொரு டிவிஷனிலும் உள்ள தெருக்களைச் சுமார் முப்பது அல்லது நாற்பது பேர் பெருக்கிச் சுத்தம் செய்கிறார்கள். எந்தத் தெருவை யார் சுத்தம் செய்ய வேண்டும் என்று திட்டவட்டமாக இப்போது ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. நீளமான தெருக்களாயிருந்தால் அதனைப் பகுதி பகுதியாகப் பிரித்து இந்த இடத்திலிருந்து இந்த இடம் வரை பெருக்க வேண்டிய பொறுப்பு இன்னாருடையது என்று இப்போது வரையறை செய்யப்பட்டுள்ளது. ஒரு குறிப்பிட்ட வீட்டு வாசலில் குப்பை அள்ளப்படாமலிருந்தால், அதற்குப் பொறுப்பான தொழிலாளியின் பெயரை உடனடியாக அறிந்து கொள்வது இப்போது எளிது. லாரிகளில் குப்பைகளை எடுத்துச் செல்லுங்கால் 'டார்பாலின்' போட்டு மூடித்தான் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற விதியை இப்போது லாரி ஓட்டுபவர்கள் உணர்ந்து செயல்படுகிறார்கள். நகரசுத்தித் தொழிலாளர்களுக்குச் சம்பளம் வழங்குவதில் சிரமம் இல்லாமலிருக்க அடையாளச் சீட்டுகள் வழங்கப்பட்டுள்ளன'' என்கிறார் திரு அந்தோனி.

அவர் மேலும் கூறுகிறார்: ''ஒவ்வொரு பத்து டிவிஷன்களுக்கும் ஓர் உதவி சுகாதார அதிகாரி, ஓர் உதவிப் பொறியாளர் வீதம் பணியாற்றி வருகின்றனர். இவர்கள் அனைவரும் முன்பெல்லாம் ரிப்பன் கட்டடத்திலிருந்துதான் அந்த அந்த டிவிஷன்களுக்குச் செல்வது வழக்கம். ரிப்பன் கட்டடத்தில் அவர்களுக்குள்ள அலுவலகப் பகுதியிலிருந்து பல்வேறு டிவிஷன்களுக்கும் செல்வதில் கால விரயம் மிகுதியாகிறது. தவிரவும் அங்கு ஏற்படக் கூடிய கோளாறுகளை, பிரச்னைகளை உடனடியாகக் கவனிக்க முடியாமல் தாமதமும் ஏற்பட்டு வந்தது. ஆகவே பத்து டிவிஷன்களுக்குரிய வட்ட உதவி அதிகாரி ரிப்பன் கட்டிடத்துக்கே வராமல் வட்ட அலுவலகங்களில் பணியாற்றும்படி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஏதாகிலும் புகார் செய்ய விரும்பும்போது மக்கள் முன்போல் ரிப்பன்கட்டிடத்துக்கு வரத்தேவையில்லை. அந்த அந்த வட்ட உதவி அதிகாரிகளின் அலுவலக முகவரி, தொலைபேசி எண் இவற்றை நாளேடுகள், நோட்டீஸ் போர்டுகள் மூலம் மக்களுக்குத் தெரியப்படுத்தியிருக்கிறோம்'' என்று சில பத்திரிகைக் குறிப்புகளைக் காண்பிக்கிறார்.

''அண்மையில் நீங்கள் சில கடுகாடுகளுக்கு நேரில் சென்று பார்த்ததாகவும் அங்கு பணிபுரிவோர் பொதுமக்களிடம் கூடுதலான தொகை வசூலித்ததைக் கண்டு பிடித்ததாகவும் பத்திரிகைகளில்செய்திவெளியாயிற்றே?''



மாநகராட்சிக்கு மானக்கேடாக விளங்கிய பள்ளிக்கூடம்.... ....அன்று



அதே பள்ளிக்கூடம் ....இன்று

''ஆமாம். பிணத்தை எரிப்பதற்கான கட்டணம் ரூ. 38 ஆக இருந்தது. (இப்போது அது உயர்த்தப்பட்டுள்ளது) அக்கௌண்ட்ஸ் கிளார்க் ஒருவர் இறந்துபோன தமது உறவினரின் உடலைத் தகனம் செய்ய வந்துள்ளார். வெட்டியான் கேட்ட தொகை நகராட்சி மன்றம் இதற்கென விதித்துள்ளதை விட மிகவும் அதிகமாக இருக்கவே பேரம் நடந்தது. நாம் எல்லோருமே ஒரு நாள் இறக்க வேண்டியவர்களே! இறந்தவரின் உடலை எரிக்கக் கூடுதல் கட்டணம் கேட்டுப் பேரம் செய்தது பெரும் குற்றமாகப் பட்டது எனக்கு. வெட்டியானை உடனடியாக 'டிஸ்மிஸ்' செய்ய உத்தரவிட்டதுடன் மானேஜரை அழைத்து, கட்டணத்தை விளக்கும் அறிவிப்புப் பலகையைப் பொதுமக்கள் பார்வையில் படும்படி ஏன் வைக்கவில்லை என்று வினவினேன். அவர் மன்னிப்புக் கோரினார். இப்போது எல்லாச் கடுகாடுகளிலும் கட்டண விகிதம் மக்கள் பார்வையில் படும்படி வைக்கப்பட்டுள்ளது'' என்று கூறுகிறார் திரு அந்தோனி.

இவரது தந்தையார் திரு டி. ஏ. வர்கீஸ் ஓய்வு பெற்ற ஐ. ஸி. எஸ். அதிகாரி. ராஜாஜி முதலமைச்சராக இருந்தபோது நிதித் துறைச் செயலாளராக இருந்து அவரது பாராட்டைப் பெற்றவர். திரு அந்தோனி



மனிதனால் தனித்து இயங்க முடிவதில்லை. அவனுக்கு அடிக்கடி ஒரு துணை தேவைப் படுகிறது. அது மனிதனாகவோ மிருகமாகவோ அல்லது அஃறிணைப் பொருளாகவோ கூட இருக்கலாம். பயணத்துக்கோ கேட்கவே வேண்டாம். நிச்சயமாய் ஒரு துணை தேவை.

திடீரென்று உங்களுக்கு ஒரு பயணம் போய் வரும் வாய்ப்பு கிட்டுகிறது. அப்போது நீங்கள் நாடும் துணை என்ன? அந்தத் துணையை நீங்கள் ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்? அதனால் நீங்கள் பெறும் பயன் யாது?

இதை ரத்னச் சுருக்கமாக, சுவாரஸ்யமாக 300 வார்த்தைகளுக்கு மேற்படாமல் எழுதுங்கள். ''பிரயாணத்துணை,'' என்று உறையின் மீதே குறிப்பிட்டு, ஆசிரியர், கல்கி, சேத்துப்பட்டு, சென்னை - 600031 என்ற முகவரிக்கு 10-5-1974க்குள் கிடைக்கும்படியாக அனுப்பி வையுங்கள். உங்கள் துணை நன்றாக அமைந்தால், ஐம்பது ரூபாய் பரிசு பெறுவீர்கள்.




மதுரை, திருநெல்வேலி, தஞ்சை மாவட்டங்களில் கலெக்டராகப் பணியாற்றியவர். விவசாயத் துறை இயக்குநராக இருந்த இவரிடம் மாநகராட்சியின் நிருவாகம் 1–12–1973 அன்று ஒப்படைக்கப்பட்டுள்ளது. நாலு மாதங்களுக்குள் இவர் சாதித்துள்ள காரியங்கள் மகத்தானவை என்று கூறலாம். ஒரு தனி மனிதரால் இவ்வளவு குறுகிய காலத்தில் இவ்வளவு சாதிக்க முடிந்தது என்பதே பெருமைக்குரிய விஷயம். இவரது மனிதாபிமானமும், ஏழைகள்பால் இவருக்குள்ள உண்மையான அன்பும் இவரது சொல்லிலும் செயலிலும் பிரதிபலிக்கின்றன.

ஓர் உதாரணம்: மாநகராட்சியின் நிருவாகத்தில் உள்ள 35 உயர்நிலைப் பள்ளிகளில் 29,200 பிள்ளைகள் கல்வி பயிலுகின்றனர். 'கார்பொரேஷன் பள்ளி' என்றாலே அதன் கல்வித் தரத்தைப் பொது மக்கள் மிகவும் குறைத்து மதிப்பிடுவது வழக்கம். காரணம், இங்கு கல்வி இலவசமாதலால் பெரும்பாலும் ஏழை எளிய மக்களின் குழந்தைகளே இப்பள்ளியில் பயில்கின்றனர். எத்தனை ஏழைப் பிள்ளைகளுக்கு வீட்டிலே படிக்க மின்விளக்குக் கூட இல்லாமல் இருக்குமோ என்ற உண்மையை உணர்ந்து, எஸ். எஸ். எல். சி. வகுப்பில் பயிலும் மாணவர்கள் தங்கள் பள்ளிகளில் இரவில் வந்து படிக்க இடமும் மின்விளக்கு வசதியும் செய்து கொடுத்துள்ளதை எவ்வளவு பாராட்டினாலும் தகும். சுயமாகப் பல விஷயங்களைச் சிந்தித்து முடிவு எடுக்கிறார். அவற்றை உடனடியாகச் செயல்படுத்துகிறார். எந்த அதிகாரியையும் அழைத்துக் கொள்ளாமல் தாமே பல இடங்களுக்கு நேரில் சென்று நிலைமையை அறிந்துகொள்கிறார். இவரது புகைப்படத்தை இக் கட்டுரையுடன் வெளியிடாமலிருப்பதன் நோக்கமும் அதுவே. தாம் இன்னார் என்று யாரும் அறியாவண்ணம் முன் அறிவிப்பின்றி நேரில் பல இடங்களுக்குச் சென்று பார்க்கும் இவரது சீரிய கொள்கையை இவரது புகைப்படத்தை வெளியிட்டு நாம் கெடுப்பானேன்?

மேயரின் தலைமையில் நகராட்சி மன்ற உறுப்பினர்கள் ஆற்ற வேண்டிய பணியினை இப்போது விசேஷ அதிகாரி திரு அந்தோனி ஆற்றி வருகிறார். இப் பதவியில் தொடர்ந்து தாம் பணியாற்றுவது ஜனநாயகத்துக்கு வெற்றியாகாது என்பது இவரது கருத்து. ''நகர சுத்தி, தெரு விளக்கு, குடிநீர், சாலை வசதி – இத்தியாதி அம்சங்களை மாநகராட்சியிடம் எதிர்பார்க்க எந்தக் குடிமகனுக்கும் உரிமையுண்டு. நான் இப் பொறுப்பிலிருந்து விடுபட்ட பின்னரும் நகர மக்களுக்கு அடிப்படைத் தேவைகள் அனைத்தும் ஒழுங்காகக் கிடைத்து வரவேண்டும் என்பதே என் அவா'' என்று அவர் கூறும்போது சாதாரண மக்களின் அடிப்படை உரிமைகளை அவர் எவ்வளவு மதித்துச் செயல்படுகிறார் என்பதை அறிகிறோம்.

—'பாணன்'



## பூனா போனார்!

இந்திரா காந்தி சமீபத்தில் பூனா நகருக்கு விஜயம் செய்தபோது அவரது பொதுக்கூட்டத்துக்கு 2500 டிரக்குகளில் வெளியூர்களிலிருந்து 'பொதுமக்கள்' அழைத்து வரப்பட்டனர். இதற்குச் செலவு ஆன டீசல் ஒரு லட்சம் லிட்டர். இதைத் தவிர ஒரு டஜனுக்கும் அதிகமான பெரிய அயல்நாட்டுக் கார்கள் ஆயிரக்கணக்கான லிட்டர் பெட்ரோல் செலவில் ஓடிக்கொண்டிருந்தன. —ஹிந்துஸ்தான் டைம்ஸ்

—பாலி

ஆரோக்கியம் அழைக்கிறது

# மிகை, பகை! மிதமே இதம்!

அவரவர் கைமுஷ்டியின் அளவு இருக்கும் அவரவர் இதயம் — உருவத்தில். எடையோ அவரவர் எடையில் நூற்றில் ஒரு பங்குக்கும் குறைவு. மார்பிலே விலா எலும்புகள் ஒன்று கூடும் மையத்துக்கு அருகிலே, சற்று இடப் புறம் சாய்ந்து, விதானத் தசையின் மீது அமர்ந்திருக்கிறது, இரவும் பகலும் ஓய்வறியாது இயங்கி வரும் இதயம்.

முழுக்க முழுக்கத் தசையாலே அமைந்த உறுப்பு. உடலின் பிற தசைகளிலிருந்து மாறுபட்டது 'கார்டியாக்' என்னும் இந்தத் தசை அமைப்பு. மிக உறுதியான தசை வகை. 'பெரிகார்டியம்' என்னும் இதயத்தின் வெளி உறை, முன்புறம் நடு மார்பெலும்போடும் கீழே விதானத் தசையோடும் பொருந்தியிருக்கிறது. இதற்கும் இதயத்துக்கும் இடையே ஒரு வகை ஜல்வு இருப்பதால், இதயம் விரிந்து சுருங்கும் அசைவு எலும்பிலோ விதானத்திலோ தெரியாது.

இதயத்துக்கு வந்து சேரும் ரத்தம் இரண்டு வகை. ஒன்று நுரையீரல்களில் பிராண வாயு உட்கொண்டு தூய்மை பெற்றுத் திரும்பும் நல்ல ரத்தம். மற்றொன்று உடல் முழுதும் பயணப்பட்டு ஒவ்வோர் அணுவுக்கும் போஷாக்கு அளித்துவிட்டு அசுத்த வாயுக்களைச் சேகரித்துக் கொண்டு திரும்பும் ரத்தம்.



மிதமான தேகப்பயிற்சி இதயத்துக்கு நல்லது. ஓட்டப் பந்தயம் போன்ற விளையாட்டுக்களில் ஈடுபடும்போது இதயத் துடிப்பு நிமிஷத்துக்கு நூறுக்கு மேலேயே போனாலும் மறுபடி சராசரி வேகத்துக்கு இறங்கிவிடும்

இதயத்திலிருந்து வெளியேறும் ரத்தமும் இதேபோல் இரண்டு வகைப்பட்டது. அசுத்த ரத்தம் நுரையீரலுக்குச் சுத்திகரிக்கப் படவும் நல்ல ரத்தம் உடலின் பல்வேறு உறுப்புக்களுக்குப் பாயவும் அனுப்பப்படுகிறது.

இதயம் ஒரு மாடிக் கட்டடம் போல. கீழே இரண்டு அறைகள்; மாடியில் இரண்டு அறைகள். வலது இதய அறைகளில் 'சோர்ந்த' ரத்தம் சேர்வதும் பின்னர் வெளியேறுவதும்; இடது இதய அறைகளில் 'நல்ல' ரத்தம் சேர்வதும் பின்னர் வெளியேறுவதும் இதயம் துடிப்பதால் நேரும் இயக்கங்கள். ஆரோக்கியமான ஒருவர் இதயம் நிமிஷத்துக்குச் சுமார் எழுபது முறை இவ்வாறு துடிக்கிறது. இந்த அசைவு உடலெங்கும் பாயும் ரத்த ஓட்டத்தில் ஒரு லயமாகப் பிரதிபலிக்கும். அதனால்தான் இதயத் துடிப்பு வேகத்தைக் கை நாடியிலே அறிய முடிகிறது. புதிதாகப் பிறந்த குழந்தையின் துடிப்பு 140 இருக்கும். வயோதிகருக்கு அறுபதுதான்!

இடதுபுற அறைகள் வலதுபுற அறைகளோடு தொடர்பு அற்றவை; அவ்வாறே மேல் அறைகளிலிருந்து கீழே இறங்கிய பிறகு மீண்டும் மேலே ஏற முடியாதபடி மேல் அறைக்கும் கீழ் அறைக்கும் வால்வு கதவுகள் உண்டு.

இதயத்தை ஒரு 'பம்பு' என்கிறார்கள் சிலர். உண்மையில் அது ஓர் இரட்டைப் பம்பு ஆகும். மேல் அறைகளும் கீழ் அறைகளும் அடுத்தடுத்து இயங்கும் அசைவையே இதயத் துடிப்பாக உணர முடிகிறது.

இதயத் துடிப்பு இரண்டு வகை ஒலிகளால் ஆனது. 'லப்ப்' என்று நீட்டி ஒலிக்கும் ஒன்று; தொடர்ந்து, 'டப்' என்று விரைந்து ஒலிக்கும் ஒன்று. முதல் ஒலி மேல் அறைகள் மூடப்பட்டுச் சுருங்குவதால் நேர்வது; அடுத்த ஒலி, கீழ் அறை காலியான பிறகு நேர்வது. இரண்டு ஒலிகளின் இடை நேரமே இதயம் ஓய்வு கொள்ளும் நேரம். இரவும் பகலும் உழைக்கும் உறுப்பாதலால் வேலையும் ஓய்வும் தொடர்ந்தபடி இருக்கிறது இதற்கு. ஒருமுறை இதயம் சுருங்கி விரிய ஐந்திலொரு செகண்டு நேரம்தான் ஆகும்.

இதயத் துடிப்பை நிகழ்த்துவது ஓர் உணர்வு சக்தி. இந்த உணர்வில் தெரியும் மின்சக்தியை நுட்பமாக விளக்க முடியும். இதை வரைபடமாக்கி உடல் நிலையை ஆராய முடிகிறது. (எலெக்ட்ரோ கார்டியோகிராப்) நோயின் தன்மையை அறிந்து சிகிச்சை பற்றிய முடிவு எடுக்க முடிகிறது. எழுபது ஆண்டுகளுக்கு முன்பு இந்தச் சாதனத்தை ஒரு டச்சுக்காரர் கண்டுபிடித்தார்.

ஆதி நாளிலிருந்தே, நாடி லயத்தில் கருதி பேதம் தெரிந்தால் உள்ளே ஏதோ கோளாறுக்கு அறிகுறி என்பதை எல்லா நாட்டினரும் அறிந்து வைத்திருந்தனர்.

ரத்த ஓட்டத்தின் வேகம் பிரமிக்கத்தக்கது. இதயத்திலிருந்து கால் வரை ரத்தம் ஓடி மறுபடியும் திரும்புவதற்குப் பதினெட்டு நொடியே ஆகிறது. தலைப் பகுதிக்கு இன்னும் விரைவில் போய் வருகிறது. ஒரு நிமிஷத்தில் இதயத்தின் உள்ளேயிருந்து அடித்து அடித்து வெளியேற்றப்படும் ரத்தத்தின் அளவு ஐந்து லிட்டர் இருக்கும்.

உடலெங்கும் உயிராற்றலான ரத்தம் வழங்கும் இதயத்துக்கும், தன் பணியைப் புரிவதற்கு ரத்தம் தேவைப்படுகிறது. குடும்பத்தில் முக்கியஸ்தர்களுக்கு முதல் டிகாக்ஷன் காப்பி என்பது போல் இதயத்திலிருந்து வெளிவரும் 'நல்ல புது' ரத்தத்தின் முதல் தீர்த்தம் இதயத் தசைகளுக்குத்தான்! 'கரோனரி ஆர்ட்டரி' ரத்தக் குழாய் கிளை விட்டு இதயத் தசையைச் சூழ்ந்து பின்னி, தேவை யான போஷாக்கை இதயத்துக்கு வழங்குகிறது.

இதயப் பணியின் வேகம் 'வேகஸ்' நரம்புகளின் இயக்க உணர்ச்சியாலும், பாதிக்கப்படுகிறது. இதை அறிந்து, தேவையான போது ஏற்ற ஊசி மருந்துகளால் இதய ஓட்டத்தை மட்டுப்படுத்தவும் முடிகிறது; அதிகரிக்கவும் முடிகிறது.

பிறவியிலேயே இதயம் அபூர்வமாகச் சேதமடைந்து காணப்படுவதுண்டு. அதன் அடையாளமாகப் பிறந்த குழந்தையின் உடல் — உதடும் நாக்கும் நகமும்கூட — நீலம் பாய்ந்திருக்கும். அந்தக் குழந்தை அழுவதே இயல்பாயிராது. பிறவி இதயக் கோளாறு உள்ள வேறு சில குழந்தைகளுக்கு, பிறக்கும் போதே தெரியாத நீலம் சில மாதங்களுக்குப் பிறகு தெரியலாம். நீலமாகாவிட்டாலும், பதினெட்டு மாதங்களுக்குள் நன்றாக விளையாட வேண்டிய குழந்தை, தவழ்வது உட்காருவது நிற்பது போன்ற எல்லா வளர்ச்சி முன்னேற்றங்களிலும் பெரிதும் பின்தங்கியிருக்கும். இவை அடையாளங்கள். சந்தேகமாக இருக்கும் குழந்தைகளை வைத்தியரிடம் காட்டுவதே நல்லது. வைத்திய ஆராய்ச்சி முன்னேற்றத்தினால் இப்போது பெரும்பாலான குழந்தை இதயக் குறைகளை ரண சிகிச்சை மூலம் நன்கு குணப்படுத்த முடிகிறது.

இதயத்தை நேரடியாகத் தாக்காத இடர்களும் உண்டு. உதாரணமாக, குழந்தைகளுக்கு வரும் ருமேடிக் (வாத) சுரம். மருத்துவத்தால் சுரம் குணமாகிவிடும். ஆனால் அதன் பயனாக இதயம் பாதிக்கப்பட்டிருப்பது வெளியே தெரியவே தெரியாது. இருபது முப்பது வயதாகும்போது, இளமையில் வந்த ருமேடிக் சுரத்தின் காரணமாக இதயம் பலவீனப்பட்டு இடர் உண்டாகும். எனவே, ஐந்திலிருந்து பதினைந்து வயது வரையில் மூட்டுகளில் வலி — சுரம் வரும் குழந்தைகள் விஷயத்தில் சுரம் நின்ற பிறகும் சிகிச்சையும் போஷாக்கும் அவசியம் தேவை.

சில இதய இடர்களுக்கு மனமே காரணம். தினசரிச் சில்லறை அவசரங்களெல்லாம் பெரிய தலை போகும் பிரச்னை போலக் கவலைப்படுவதே இயல்பாகச் சிலர் இருக்கிறார்களே, அவர்கள் இதய இடர், மருத்துவத்துக்கு அப்பாற்பட்டது! மனப் பயிற்சியே வைத்தியம்.

இதயத்தின் முக்கிய பகை இரண்டு. ரத்த அழுத்த மிகை ஒன்று; மாரடைப்பு மற்றொன்று. நடுத்தர வயதினர் எத்தனையோ காரணங்களால் இவற்றால் பாதிக்கப்படுகிறார்கள். அமெரிக்காவில் மட்டும் ஓராண்டில் மரிப்பவரில் பாதிக்கு மேல் (55 சதம்)



இருதயக் கோளாறுகளைத் துல்லியமாக அறிவதற்காக, மேற்கு ஜெர்மனியில் பல மருத்துவ மனைகளில் கம்ப்யூட்டர் சாதனங்களை மருத்துவ நிபுணர்கள் பயன்படுத்துகிறார்கள். இதற்கான ''எலெக்டிரோ கார்டியோகிராம்'' சாதனமும், கம்ப்யூட்டர் சாதனமும் ஒன்றாக இணைந்து இயங்கி, இதயக் கோளாறுகளைத் தெளிவாகப் பதிவு செய்து தெரிவிக்கிறது.

இதயம் பற்றிய ஏதேனும் கோளாறு காரணமாகவே தமது முடிவை அடைகின்றனராம்.

இதயத்திலிருந்து பாயும் ரத்தத்தின் வேகமே ரத்த அழுத்தம். ரத்த அழுத்தம் எல்லோருக்கும்தான் உண்டு. அழுத்த மிகையே நோய்ச் சின்னம். அழுத்தத்தை அளக்கும் கருவியைக் கொண்டு இதயம் சுருங்கும்போதும் விரிந்து கொள்ளும் போதும் ரத்தம் பாயும் தன்மையை, ஒரு பாதரச மானியில் காற்றழுத்தத்தைக் கொண்டு, அளப்பது வழக்கம். இதில் உச்ச அளவு, 140, இறக்க அளவு 90 என்று இருக்கலாம். (ரத்த அழுத்தம் பார்க்கும் கருவியில் பாதரசம் எத்தனை மில்லி மீட்டர் ஏறுகிறது என்பதே இந்த எண்ணிக்கை.) அபூர்வமாக ரத்த அழுத்த மிகை அளவு 180–200 என்றால் கவலைப்பட வேண்டாம். உடல் நிலை

சரியா விருப்பவருக்குக் கூட கோபத்திலும், பயத்திலும், அதிர்ச்சியிலும் ரத்த அழுத்த மிகை தாற்காலிகமாக நேர வாய்ப்புண்டு. பல நாட்கள் தொடர்ந்து நீடித்தால்தான் தவறு. வயதாக ஆக சிலருடைய ரத்தக் குழாய் விரைத்துக் கொண்டு, காலப்போக்கில் சுண்ணாம்பு அம்சம் படிந்து, கடினமாகி விடுவதும் உண்டு. இந்த நிலையில் ரத்த அழுத்தம் மிகையாவதுண்டு.

ரத்த அழுத்த மிகை இதயத்துக்கு ஒரு சுமை என்பதோடு வேறு பல கோளாறுகளும் ஏற்படக் காரணமாகும். சிகிச்சை பெற வேண்டும்.

மாரடைப்பு என்றால் என்ன? இதயம் நன்றாயிருந்தாலும் இதயத் தசைகளுக்கு ரத்த ஓட்டம் வழங்கும் குழாய்கள் இறுகிக் கொண்டோ, அடைத்துக் கொண்டோ தொந்தரவு தருவதுண்டு. இதனால் நெஞ்சு வலிக்கும். இது ஒரு வகை மாரடைப்பு.

இதயத்திலிருந்து நல்ல ரத்தம் எடுத்துச் செல்லும் முதன்மைக் குழாயான அயோர்ட்டா சுவரில் ஏதாவது சேதம் நேர்ந்து, அந்தப் பலவீனத்தாலும் திடீர் என்று மாரடைப்பு நேரலாம். நமது நாட்டில் 45—55 வயதுப் பிரிவினரே பெரும்பாலும் மாரடைப்புக்கு ஆளாகின்றனர்.

ரத்தத்தில் 'கொலஸ்ட்ரால்' அம்சம் அதிகமாக இருப்பது நல்லதல்ல. இருதயத் தசைக்கு ரத்தம் கொண்டு செல்லும் குழாய் அடைத்துக் கொள்ள இது காரணமாகிறது. ரத்தப் பரிசோதனையில் கொலஸ்ட்ரால் அளவு தெரியும். அதிகமாயிருந்தால் வைத்திய ஆலோசனையுடன் இதைக் குறைத்துக் கொள்ளப் பழக வேண்டும். பொதுவாகக் கொழுப்பு நிறைந்த உணவால் கொலஸ்ட்ரால் சேருகிறது. சிலர் உடலுக்குத்தேங்காய் எண்ணெய்கூட ஆகாது.

இதயத் தாக்குதல் என்னும் மாரடைப்பு ஒரு முறை வந்தால் அதையே ஓர் எச்சரிக்கையாகக் கொண்டு, டாக்டர் ஆலோசனையுடன் வாழ்க்கை முறைகளையும் பழக்கங்களையும் அலசிப் பார்த்து, ஏற்ற மாறுதல்களைச் செய்து கொண்டு, ஆரோக்கியமாக வாழ முடியும்.

சென்ற முப்பது ஆண்டுகளில் இதயத்தைப் பொருத்த ரண சிகிச்சைகள் சர்வ சாதாரணமாகிவிட்டன.

ரண சிகிச்சையின் போது செயற்கை இதய-நுரையீரல் கருவியைப் பயன்படுத்த முடிவதானது மாபெரும் முன்னேற்றங்களுள் ஒன்று. சிகிச்சை நிபுணருக்கு இது பேருதவி. பிளாஸ்டிக் வால்வை இதயத்தில் பொருத்திச் சில கோளாறுகளைச் சரிப்படுத்த முடிகிறது.

அப்போதுதான் இறந்தவரது ஆரோக்கியமான இதயத்தை எடுத்து மற்றவருக்குப் பொருத்திய சாதனைகளும் நேர்ந்துள்ளன. ஆனால் இந்த இதய மாற்றங்களைப் பரவலான சிகிச்சையாக மருத்துவ உலகம் ஏற்றுக் கொள்ளவில்லை. சோதனை நிலையில் உள்ள சாதனைகளே இவை.

இதயத்திடம் அன்பாக இருக்க வேண்டுமானால் கடைப்பிடிக்க வேண்டியவை இவை: களைப்பு தெரிந்தவுடன் ஓய்வு; உணவு வேளையிலும் உணவிலும் ஒரு கட்டுப்பாடு; உணவில் கொழுப்புப் பண்டம் மிகையாகாமல் பார்த்துக் கொள்ளுதல்; மிதமான உடற் பயிற்சி. உணவில் மட்டுமல்ல; மன உளைச்சலிலும், உழைப்பிலும், ஏன் உல்லாசப் பழக்கங்களிலும், கூட மிதமாக இருந்தால் இதயத்துக்கு இதமாக இருக்கும்.

ஒரு பிரபல வைத்தியர் சொன்ன வாசகம் இது: ''எதிலும் மிகை, பகை; மிதம் இதம்.'' அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமே விஷமாகும் போது விஷமான மதுவும் சிகரெட்டும் மிகையானால் கேடு விளைவிக்கக் கேட்கவா வேண்டும்?

ஆலோசனை: டாக்டர் சி. ஆர். ஆர். பிள்ளை
கட்டுரை: தம்பி சீனிவாசன்

# படித்துப் பாருங்கள்

## எடுப்பார் கைப்பிள்ளை

பள்ளியில் ஆசிரியர் ஏதாவது ஒரு வார்த்தையைக் கொடுத்து அதை வைத்து வியாசம் எழுதச் சொன்னால் பலருக்கு அது வேப்பங்காயாக இருக்கும். கட்டுரை அரைப்பக்கம் கூட வளர்வது பெரும் கஷ்டம்தான்.எழுத்து அழுது வடியும். ஒரு வார்த்தையை வைத்துக் கொண்டு சொற்சிலம்பமாடுவதுடன் இலக்கியங்களோடு ஊடாடி, நகைச்சுவை மிளிரப் பெரிய கட்டுரையை ரஸமாக ஆக்குவது சிரமமான காரியம். மகரத்துக்கு இந்தக் கஷ்டமான கலை கைவந்த கலை.

இந்தக் கட்டுரைத் தொடரில் முப்பது ஹாஸ்யக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. 'பத்திரிகைகள் அன்று இருந்திருந்தால்', 'மின்னல்', 'வரங்கள்', வில்லன்கள்'போன்ற நகைச்சுவைக் கட்டுரைகள்.

'எடுப்பார் கைப்பிள்ளை'யான உலக்கை, வந்த விருந்தாளியை விரட்டிய நிகழ்ச்சி புன்னகை மாறாமல் படித்து முடிக்கக் கூடியது.

பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சென்னை—14. விலை: ரூ. 4.50.

## கவிதைப் பூங்கா

வண்ண வண்ணங்களாகப் பூத்துக்குலுங்கி நறுமணம் கமழும் பற்பலவிதமான பூக்களோடு கூடிய மலர்த் தோட்டத்தைப் பூங்கா என்று அழைக்கிறோம். அதே மாதிரி எண்ணங்களில் வேறுபட்டுப் பல்சுவையும் பல்உருவங்களையும் கொண்ட தமிழ் மணங்கமழும் பற்பல கவிதைகளைத் தன்னில் அடக்கிக் கொண்டிருக்கும் இந்நூலைக் கவிதைப் பூங்கா என்று அழைப்பது சாலப் பொருத்தமானதாகும். தமிழ்க் கடவுளான முருகப் பெருமானை மனம் உருகித் துதித்திருக்கும் இந்நூல் ஆசிரியர் இந்நூலை இயற் தமிழ்த் தொகுதி, இசைத் தமிழ்த் தொகுதி என்று இரு பிரிவுகளாகப் பிரித்து வெளியிட்டிருக்கிறார். தெய்விகப் பாடல்களோடு, கதம்பமாலை என்ற பெயரில் வேதாந்தக் கருப்பொருளை உள்ளடக்கிய பல பாடல்களும் உள்ளன.

இயற்றியவர்: வித்துவான் அ. சின்னண்ணன்; வெளியிடுவோர்: சி. கல்யாணி கலையகம், 3, ஆர்ஃபன் ஸ்கூல்தெரு, சென்னை-30; விலை: ரூ. 2.

# புதுமை குன்றா பொலிவுடன் இருங்கள்




சிந்தால் பவுடர் அதிவெப்பமான நாளிலும் உங்களைப் புதுமை குன்றாமல் வைத்திருக்கிறது. அதன் அற்புத நறுமணம் உங்களை விட்டு அகலுவதில்லை.

கோத்ரெஜ் அளிக்கும்

**சிந்தால்**

# பினகா ஃப்ளோரைட்* பற்பசை வலிதரும் சொத்தையையும் பற்சிதைவையும் தடுக்கிறது

## ஆகவே நீங்கள் அதை உபயோகிக்க வேண்டும்

பல் வைத்தியர்களும் ஆராய்ச்சி விஞ்ஞானிகளும் இதை ஊர்ச்சிதம் செய்கின்றனர்

*"பற்சிதைவைக் காப்பதில் பெரும்பகுதி ஃப்ளோரைட் என்று நமக்கு இப்பொழுது தெரியும். பல் ஆரோக்கிய துறையில் விஞ்ஞான ஆராய்ச்சி தந்த ஒரு பெரும் சாதனை ஃப்ளோரைட்"—

"தி ஜெர்னல் ஆஃப் மெடிகல் வியூஸ் (தி மெடிஷன் & சர்ஜன் VIII 252-57 பிப். 1967)".

**பினகா ஃப்ளோரைடினால் பல்துலக்குங்கள் பற்களை உறுதியாக வைத்திருங்கள்**




பினகா டூத் பிரஷ்களிலுள்ள மழுக்கப்பட்ட முனைகள் ஈறுகளுக்கு ஊறு செய்யாது



# விண்ணும் மண்ணும்

## 31. தென்றலில் செண்டு மல்லிகை

உலகிலே கலைப் பொருள்கள் எத்தனை எத்தனையோ இருக்கின்றன. மனிதனால் உருவாக்கப்பட்ட அற்புத சிருஷ்டிகள் உள்ளன. இயற்கையோடு இழைந்த எழிற் காட்சிகளோ ஏராளம்.

என்றாலும் அழகு என்றோ வனப்பு என்றோ குறிப்பிட்டதுமே எந்த ஒரு மனிதனுக்கும் உடனே நினைவு வருவது எழில் வடிவமாக விளங்கும் ஒரு மங்கையின் தோற்றம்தான்! மாலை நேரத்தின் செம்மை படர்ந்த வானத்தையோ, சூரியோதயம் ஆகும் கடற்கரைப் பிரதேசத்தையோ, பாறைகளில் முட்டி மோதிக் கொண்டு வண்ணத் துளிச் சிதறலுடன் பாயும் நதியையோ அவன் அழகானதாகக் கருதமாட்டான் என்பதல்ல அர்த்தம். ஆனால் இவையெல்லாமே இரண்டாம்பட்சம்தான்.

மனிதனின் இந்தப் பலவீனத்தைச் சுலபமாகக் காசாக்கிக் கொள்ளும் தொழில் உலக சரித்திரத்தின் ஆதிநாளிலிருந்து இன்று வரை வெவ்வேறு நாடுகளிலும் பல்கிப் பெருகி வந்திருக்கிறது. வேறுவிதமான ஆற்றல் இல்லாதவர்கள் பாவம், இரகசியமாகவோ வெளிப்படையாகவோ பெண் உருவத்தைக் காட்டிப் பணம் சம்பாதிக்கிறார்கள். இத்தகையவர்கள் இல்லாத பெரிய நகரம் இன்று உலகில் இல்லை என்று துணிந்து சொல்லலாம். அவ்வாறிருந்தும் நைட் கிளப் என்றதுமே பாரிஸும் பாரிஸ் என்றதுமே நைட் கிளப்பும் பலருக்கு நினைவு வருவது ஏன்?

நைட் கிளப்புகள் அங்கே எண்ணிக்கையில் மிகுதி என்பதோ கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டு காலமாகப் பெண் வடிவத்தை அரங்கில் காட்டி வரும் ஃபாலிஸ் பெர்கர் என்ற தொன்மையான இரவுக் கேளிக்கை விடுதி அங்கே இருப்பதோ மட்டும் காரணங்கள் அல்ல. மிக மிக மட்டமான, அருவருக்கத்தக்க

கி.ராஜேந்திரன்

நைட் கிளப்புகள் அங்கு உள்ளன என்பதும் காரணம் அல்ல. அற்புதமான கலைத் திறனையும் காட்டும் இரவுக் கேந்திரங்கள் அங்கு உண்டு என்பதுதான் முக்கியம். அரங்க நிர்மாணத்திலும் ஒலி, ஒளி அமைப்பிலும் அசாதாரணமான கலை ஆற்றலைக் காட்டும் அரங்குகள் பாரிஸுக்குப் பாரெல்லாம் பிராபல்யத்தைத் தேடித் தந்துள்ளன. அருவி கொட்டுவதையும், அலைகள் பொங்குவதையும், கானகத்தில் விலங்குகள் வளைய வருவதையும்கூட மெய்சிலிர்க்கும்விதமாகக் காண்பிப்பார்கள். இத்தகைய ஒரு புகழ்பெற்ற நிறுவனம் லிடோ என்பது.

''பாரிஸுக்கு வருகிறவர்கள் எல்லாம் பெரும்பாலும் லிடோவுக்கோ அல்லது ஃபாலிஸ் பெர்கெருக்கோ தான் போவார்கள். நான் வித்தியாசமான ஓர் இடத்துக்கு உங்களை அழைத்துச் செல்கிறேன்'' என்றான் ஏற்கனவே சில தடவைகள் பாரிஸுக்கு வந்து அனுபவப்பட்டிருக்கும் மைக்கேல்.

''சரிதான்! பாரிஸில் உள்ள நைட் கிளப்புகள் எல்லாம் உனக்கு நன்கு அத்துப்படியானவை போலிருக்கிறதே''என்று கிண்டல் செய்தான் தனஞ்செயன்.

''அதற்கு ஒரு வாழ்நாள் போதாது!'' என்று பதில் கிடைத்தது.

அவர்கள் ஏற்கனவே பார்த்திருந்த ஆர்க் டி ட்ரயம்ப் என்ற நெப்போலியனின் வெற்றி வளைவுக்குப் பக்கத்தில், ஓர் அகலக் குறைவான சாலையில் சற்றுத் தூரம் சென்ற பிறகு டாக்ஸி அவர்களை 'இறக்கிவிட்டுப் போயிற்று. இரவு பதினொரு மணிக்கு மேலாகிவிட்டபடியால் சுற்றிலும் இருள் சூழ்ந்திருந்தது. கடைகளெல்லாம் மூடப்பட்டு வீதி, போக்குவரத்து இன்றி வெறிச்சென்றிருந்தது. தெரு விளக்கு சற்றுத் தொலைவில் பரப்பிய ஒளி இவர்கள் நின்ற இடத்தை அணுகவில்லை. ''நைட் இருக்கிறது; கிளப்பைத்தான் காணோம்!'' என்றாள் அனுபமா.

''இந்த இருட்டுக்கு உன் கண்களைப் பழக்கப்படுத்திக் கொண்டு சுற்றுமுற்றும் பார்'' என்றான் மைக்கேல்.

அவ்வாறே அனுபமா, கண்களைச் சில தடவை மூடித் திறந்து நாலாபக்கமும் நோக்கிய போது தெருவின் எதிர்ச் சாரி கட்டடங்களுள் ஒன்றின் சுவரில் மங்கலான இளஞ் சிவப்பு ஒளியை ஒன்றரை அடி நீளத்துக்குக் கண்டாள். அருகில் சென்று பார்த்தபோது அதில், ''கிரேஸி ஹார்ஸ் ஸலூன்'' என்ற ஆங்கில வார்த்தைகள் தென்பட்டன.

அதை அடுத்திருந்த ஒரு வளைவுக்குள் இருட் குகையில் புகுவது போல் அவர்களை அழைத்துக் கொண்டு நுழைந்த மைக்கேல், இடப்புறம் திரும்பி மேலும் இருட்டில் நடந்து, பிறகு மீண்டும் இடப்புறத்தில் ஒரு படிக்கட்டில் இறங்கலானான். தனஞ்செயனுக்குச் சரித்திரக் கதைகளில் தான் படித்துள்ள மர்மச் சுவர்கள், இருட் குகைகள், சுரங்கப் பாதைகள் எல்லாம் நினைவுக்கு வந்தன. ''என்ன இது, ஒரே இருட்டடிப்பாயிருக்கிறதே! கண்ணைக் கூசும் விதமாய் வாசலில் நியான் விளக்குப் போட்டு பாரி



ஸுக்கு வரும் உல்லாசப் பயணிகளின் கவனத்தைக் கவரமாட்டார்களோ?'' என்றான்.

''இவர்கள் அப்படிச் செய்யமாட்டார்கள். இங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளின் அருமை பெருமைகள் பரவி மக்களை ஈர்க்க வேண்டுமேயல்லாது விளம்பரத்தின் மூலமோ பகட்டான குழல் விளக்குகள் மூலமோ அதைச் சாதிக்கக் கூடாது என்பது இவர்கள் கருத்து.''

படிக்கட்டில் இறங்கிய பின்னர் ஒரு விசாலமான கூடம் தெரிந்தது. அதன் ஒரு மூலையில் — இவர்கள் நுழைந்த பகுதியில் 'பார்'. அதையடுத்து இரண்டு படிகள் இறங்கினால் பல சிறு மேஜை நாற்காலிகள் கூடத்தை நிறைத்துக் கொண்டிருந்தன. அப்பால் ஒரு சிறிய அரங்கம். நாற்காலிகள் எல்லாவற்றையும் ஆண்களும் பெண்களுமாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தனர். பல நூறு குரல்கள் மிருதுவான குரலில் பேசுவது ஒன்றுசேர்ந்து, ஆடிக் காற்றில் அரச இலைகள் எழுப்பும் சலசலச் சத்தத்தை நினைவூட்டின தனஞ்செயனுக்கு.

''அடேயப்பா, வெளியே இருந்து பார்த்தால் ஒன்றும் கணிக்க முடியவில்லை. இங்கே இவ்வளவு கூட்டம் இருக்கிறதே!'' என்றான். 'பார்' அருகே இருந்த சுழலும் ஸ்டூல்களிலும் கூட உட்கார இடம் பிடிக்கமுடியவில்லை. அவர்களைப் போலவே நிற்க வேண்டிய நிலையில் வேறு சிலரும் இருந்தனர்.



ஒரு ஸ்டூலில் இருந்தவன் இறங்கிக் கொண்டு அனுபமாவுக்கு அதை வழங்கினான். நன்றி கூறி அவள் அதில் அமர்ந்ததும் அவனுக்கும் சேர்த்து மைக்கேல் நாலு ட்ரிங்குகளுக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு அவனுடன் மரியாதைக்காகச் சில வார்த்தைகள் பேசினான், ஃபிரெஞ்சு மொழியில். பிறகு அனுபமா பக்கம் திரும்பி, ''மதுக் கோப்பைகள் வந்ததும் நீ வழக்கம் போல் அதை அருந்துவதாகப் பாவனை பண்ணிவிட்டு என்னிடம் தந்துவிடலாம்'' என்றான், இலேசாகச் சிரித்து.

இதமான இசை எழுந்த மறு கணம் பேச்சு அடங்கியது. ஜோடி ஜோடியாகச் சிலர் நடனமாடுவதற்கென ஒதுக்கப்பட்ட தரைப் பகுதிக்கு நகர்ந்தனர்.

''என்னுடைய விஸ்கியை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்'' என்று கூறிவிட்டு மைக்கேல் அனுபமாவின் முழங்கையைப் பற்றி அழைத்துச் சென்றான்.

''பாலுக்குப் பூனை காவல்'' என்ற பழமொழியைக் கூறித் தமாஷ் செய்தானே ஒழியத் தனஞ்செயன் தனது விஸ்கியைக்கூட அதிகம் அருந்தவில்லை. புதிதாய் அறிமுகமானவனிடம் ஒரு கோப்பையைத் தந்துவிட்டுத் தனது கோப்பையைக் கரத்தில் ஏந்தி ஐஸ் கட்டிகளைக் கரைய விட்டுக் கொண்டு வைத்த கண் வாங்காமல் மைக்கேலையும் அனுபமாவையும் நோக்கியபடி இருந்தான். மங்கிய ஒளிதான், கூட்டம் மிகுதிதான் என்றாலும் அவர்கள் இழைந்து அழகாக நடனமாடும் காட்சியைத் தவற விடக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டு பார்த்தான். மைக்கேலின் வலக் கரம் அவள் இடையைச் சூழ்ந்திருக்க இடது கரம் அவள் வலக் கரத்தோடு பின்னிக் கிடந்தது. அவள் தனது இடது கரத்தால் அவனது தோளைக் கொக்கி போட்டாற் போல் பிடித்துக் கொண்டு அவன் நெஞ்சில் தனது கன்னத்தை அழுந்தாதவாறு ஒரு நாசூக்குடன் பதியவைத்துக் கண்களை மூடி, இதமான இனிய இசைக்கு ஏற்பத் தென்றலில் செண்டு மல்லிகை பூத்த செடி ஆடுவதுபோல் மிதமாக அசைத்ததானது தனஞ்செயனின் உள்ளத்தைக் கிளுகிளுக்க வைத்தது.

''எத்தனை அழகான ஜோடி'' என்று அந்தத் தாற்காலிக நண்பன் ஃபிரெஞ்சு மொழியில்தான் கூறினான் என்றாலும் சுட்டிக் காட்டிப் பேசியதால் தனஞ்செயனுக்குப் புரியாமல் போகவில்லை. அந்த ஒரு கணத்தில் அவன் உள்ளத்தில் ஒரு கேள்வி விசுவரூபம் எடுத்தது.

அனுபமாவைத் தான் விரும்பலாம், காதலிக்கலாம், சற்று முனைந்து முயற்சி செய்தால் மனைவியாகக் கூட அடைந்து விடலாம். ஆனால் அவளைத் துணைவியாக அடைந்த தன் வாழ்க்கை எப்படி இருக்கும்? பிறப்பால் இல்லா விட்டாலும் வளர்ப்பால், கல்வியால், பழக்கத்தால், வாழ்ந்த சூழலால், நண்பர்கள் அமைந்த விதத்தால் முக்காலே மூணு வீசம் அமெரிக்க நங்கையாகி விட்ட அவளுடன் நடத்தக் கூடிய தன் இல்லறம் சிறக்குமா? பொறுமையோடு பார்க்கிற தனது மனத்தில் கூட அவள் இப்போது நடனமாடுகிற நயமானது நளின உணர்ச்சிகளை ஏற்படுத்துகிறதே; அவ்வாறிருக்க, வேஷம் போடுவது போல் மேனாட்டு உடைகளைப் பல தருணங்களில் தரித்திருந்தாலும் இதயத்தால் முழுக்க முழுக்க இந்தியனாகிய தன்னால் அவளது எதிர்பார்ப்புக்களுக்கு ஈடு கொடுக்க முடியுமா? தனக்கு மேனாட்டு சாஸ்திரிய இசையைத் துளிக்கூட ரசிக்கத் தெரியாது என்பதைத் தனஞ்செயன் நினைத்துப் பார்த்தான். அனுபமாவின் வீட்டில் பெரியதொரு பியானோ பளபளவென்று மின்னிக் கொண்டிருந்ததும் அவள் பயிலுவதாகச் சொன்னதும் அவனுக்கு ஞாபகம் வந்தன. பீத்தோவன், மொஸார்ட் என்ற பெயர்களைக் கேள்விப்பட்டதற்கு அதிகமாக அவனுக்கு மேனாட்டு இசையில் ஈடுபாடு ஏற்பட்டதில்லை. வால்ட்ஸ், டேங்கோ, டுவிஸ்ட், மேம்போ போன்ற நடனங்களைத் திரைப் படங்களில் சில சமயம் பார்த்ததோடு சரி; எந்தப் பெயர் எந்தவகை நடனத்துக்கும் அதை யொட்டிய இசைக்கும் பொருந்தும் என்றுகூட அவனுக்குத் தெரியாது.

மிருதுவான மலரில் மென்மையாகக் கால்களைப் பதித்து, தேன் பருகும் சுவாரஸ்யத்தில் சிறகை மெல்ல விரித்து மடிக்கும் வண்ணப் பட்டுப் பூச்சி போல அனுபமா மைக்கேலுடன் இணைந்து, மனமோகன இசையில் போதை கொண்டு அசைவதைக் கண்டான் தனஞ்செயன். அவனுக்கு ஒரே குழப்பமா யிருந்தது.

## 32. தீனக் குரல்

இசை நின்று கரகோஷம் பெற்றது. மைக்கேலும் அனுபமாவும் திரும்பி, தங்கள் தங்கள் மதுக் கோப்பைகளைப் பெற்றுக் கொண்ட மறு கணம் மங்கிய ஒளி விளக்குகளும் அணைந்து மையிருள் கவ்வியது.

# சாரதா'ஸ்


பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான பெயர்
ஹுன் பில்டிங், 175/1, மவுண்ட்ரோடு,
சென்னை-2. போன்: 87177
குதூகலமான
திருமணம் மற்றும்
விசேஷ
வைபவங்களுக்கு
சிறந்த பட்டுப் புடவைகளை
அளிப்பது
சாரதா'ஸ்
32, N.S.B. ரோடு, திருச்சி-2,
போன்: 7077

# நேற்றிரவு நீங்கள் கொசுக்கடியால் துன்பப்பட்டீர்களா?

# இன்றே வாங்குவீர் ரிப்லெக்ஸ் க்ரீம் இன்றிரவு விரட்டுவீர் கொசுக்களை!



இன்பமணம் கொண்ட ரிப்லெக்ஸ் க்ரீம் கொசுக்களை விரட்டுவதில் உன்னதமானது. முற்றிலும் தீங்கற்றது; சருமத்துக்குஎரிச்சலூட்டாது. குழந்தையின் மென்மையான சருமத்தின் மீது இதைப் பத்திரமாகத் தடவலாம்.



உங்கள் முகம், கை, கால்களின் திறந்த பகுதிகளின் மீது இரவில் ரிப்லெக்ஸ் தடவுங்கள். கொசுக்களின் தொந்தரவின்றி இரவில் நிம்மதியாகத் தூங்கலாம்.



ரிப்லெக்ஸ் க்ரீம் வெண்மையாக இருப்பதால், உங்கள் சருமத்தில் எளிதில் மறைந்து விடுகிறது. அது துணிகளின் மீது கறை உண்டு பண்ணாது; சருமத்தின் மீது எண்ணெய் படிய விடாது.




நறுமணமுள்ள

## ரிப்லெக்ஸ்

கொசுக்களை விரட்டியடிக்கிறது

டாடா ஃபைஸன் தயாரிப்பு

அரங்கில் மட்டும் இப்போது ஒலியும் ஒளியும் குலவின. சில பெண் வடிவங்களின் அசைவுகளும் தெரிந்தன. ஆனால் அந்தக் காட்சியும் காதில் ஒலித்த இசையும் இன்றைய உலகில் பார்க்கக் கூடியனவாக, கேட்கக் கூடியனவாக இல்லை. அங்கு குழுமியிருந்த அனைவரையும் எதிர்காலத்துக்கு அழைத்துச் சென்றது அரங்கம். ஓர் எலெக்ட்ரானிக் யுகத்தைச் சிருஷ்டித்துத் தந்தது. மனிதர்களாக இயந்திரங்கள் மட்டுமின்றி இயந்திரங்களாக மனிதர்களும் இயங்குகிற ஒரு புதுமை யுகம் விரைவிலேயே தோன்றப் போவதை உணர்த்தியது. அதைக் காண அதிசயமாகவும் இருந்தது, ஓரளவு பயமாகவும் இருந்தது.

மேடையில் இருந்த பெண்கள், குறைந்தபட்ச ஆடை உடுத்தியிருந்தனர் என்பது உண்மையாயினும் அதற்கு வெளிச்சம் போட்டுக் காட்டவில்லை அரங்கம். அத்தியாவசியமான அளவில் மட்டுமே ஒளி பாய்ந்தது என்பதுடன், அது மின்னியது, வர்ண ஜாலமும் செய்தது. இசையோ, எலெக்ட்ரானிக் பீப் பீப்களும் இதர பல இயந்திர ஒலிகளும் அபாய அறிவிப்புச் சங்கின் ஓசையும் கலந்த நூதனமான ஒன்றாயிருந்தது. அணங்குகளின் அசைவுகளோ துரிதமான இயந்திர கதியில் உணர்ச்சியற்றுத் தோன்றின. எல்லாமாகச் சேர்ந்து ஒரு விசித்திர எதிர்கால உலகில் நம்மைக் குடியேற்றின.

காட்சி முடிந்த பிறகும் தனஞ்செயன் திறந்த வாயை மூடவில்லை. மூட அந்த அரங்கம் அனுமதிக்கவும் இல்லை. அடுத்த காட்சி நொடிப் போதில் தொடர்ந்தது — விண்வெளிப் பயணம் மேற்கொண்டுள்ள ஓர் ஆடவனையும் பெண்ணையும் பல்லாண்டுகளுக்கு விண்கலத்திலேயே உறக்கத்தில் ஆழ்த்தி, அதன் மூலம் அவர்கள் ஆயுளை விருத்தி செய்து, நூற்றுக் கணக்கான வருஷங்களுக்குப் பிறகு அவர்களை வேறு ஒரு சூரிய மண்டலத்தைச் சேர்ந்த கிரகத்தில் விழித்தெழச் செய்கிற அளவுக்கு விஞ்ஞானம் வளர்ந்துவிட்ட ஒரு காலத்தை இப்போது மேடையில் காண முடிந்தது. அத்தகைய ஒரு விஞ்ஞான வளர்ச்சிக்கு உதவிய மனிதனின் அறிவாற்றலெல்லாம் அந்த விஞ்ஞானத்துக்கே அடிமையாகி விட்ட அவல நிலையை எடுத்துக் காட்டியது அந் நிகழ்ச்சி. இந்தக் கற்பனைக்கு—எதிர் காலத்தில் உண்மையாகக் கூடிய கற்பனைக்கு — ஏற்ப ஒளி ஒலி அமைப்புக்களும் மாற்றம் பெற்றிருந்தன. இன்னும், அணு ஆயுத யுத்தத்தால் அழிந்து பட்ட உலகின் பரிதாப நிலையையும், கடல் ஆழத்தில் தோன்றவிருக்கும் மாபெரும் நகரங்களின் வாழ்க்கை முறையையும் காண்பித்தார்கள். இவ்விதம் விகல்பத்தை விஞ்ஞானத்தோடு இணைத்து, அதற்கு நூதனமான பின்னணி இசையும் விநோதமான ஒளி அமைப்பும் தந்து, விசித்திரமான நாட்டிய நாடகமாக்கிய போது, விரசம் பின்னணிக்குச் சென்று மங்கி, மறைந்து, மடிந்தேகூடப் போய் விட்டது!

காட்சி முடிந்து, மேலேறிச் சாலைக்கு வந்ததும், ''ஒரு நைட் கிளப்புக்குப் போன உணர்ச்சியே எனக்கு ஏற்படவில்லையே!'' என்றான் தனஞ்செயன்.

''அதுதான் இவர்களுடைய சாமர்த்தியம்'' என்றான் மைக்கேல். ''வழக்கமான இரவுக் கேந்திரங்களிலிருந்து மாறுபட்டுத் தனித் தன்மையுடன் நிகழ

1952ல் தமிழ் நாட்டில் பஞ்ச நிலை உருவானபொழுது, ஏழைச் சிறுவர், சிறுமியரின் நலனுக்காகப் பல தேசபக்தச் செம்மல்களின் முயற்சியின் பலனாகத் தொடங்கப்பட்டது வாலாஜாபேட்டை தீனபந்து ஆசிரமம். அன்று முப்பது சிறார்களுடன் தொடங்கிய இவ்வாசிரமம் இன்று நானூறு குழந்தைகளுக்கு நலன் பயப்பதாக வளர்ந்துள்ளது. குழந்தைகளின் சௌகரியத்துக்காக மாடி நீர்த் தொட்டியும் குளியலறைகளும் கட்டும் பணியில் இப்பொழுது ஈடுபட்டிருக்கிறது. அகத் தூய்மையும் புறத் தூய்மையும் ஏழை இளஞ் சிறார்களுக்கு வழங்கும் நற்பணிக்குப் பொருளுதவி செய்ய விரும்புபவர்கள் பொருளைப் பணமாகவும் தரலாம்; சிமெண்டு போன்ற கட்டடத் தளவாடங்களாகவும் தரலாம். மேற்கண்ட பணிக்குத் தொடர்புகொள்ள இதோ கீழ்க்கண்டமுகவரி: செயலாளர், தீனபந்து ஆசிரமம், வாலாஜா பேட்டை, வட ஆர்க்காடு மாவட்டம்.

வேண்டும் என்று நினைத்து அதில் வெற்றி பெற்றுமிருக்கிறார்கள்.''

''மெய்ஞானத்தை உணராத விஞ்ஞானத்தினால் ஏற்படக்கூடிய கோளாறுகளைப் புரிய வைப்பதாய் இருந்தன நிகழ்ச்சிகள்'' என்றாள் அனுபமா. ''மனிதனை விட ஆற்றல் மிகுந்ததான இயந்திரங்களை — ஏன் செயற்கை மூளையைக் கூடத் தயாரித்து விடலாம். ஆனால் ஆன்மாவைத் சிருஷ்டிக்க யாரால் முடியும்? அதுதான் நம்மை உயர்த்திக் காட்டும் பொக்கிஷம். அதை அலட்சியப்படுத்திக் கைவிட்டோமானால் தொலைந்தோம்!''

''பாரிஸைப் பற்றிய ரொம்ப உயர்வான எண்ணத்தோடேயே நீ தாய் நாடு திரும்பக் கூடாது. முதல் தரமான ஒரு நைட் கிளப்புக்குப் பிறகு சில மட்டரகமானவற்றையும் நீ பார்த்தாக வேண்டும்'' என்று கூறி மைக்கேல் ஒரு டாக்ஸி பிடித்தான்.

''அது எதற்கு?'' என்ற அனுபமாவின் ஆட்சேபனை அவ்விருவரிடமும் எடுபடவில்லை. நைட் கிளப்புகளும் சரி, இரவில் டாக்சிக் கட்டணங்களும் சரி, செம்மையாகக் கறப்பனவாய் இருந்தன. ஆனால் அது பற்றிச் சிந்திக்க விடாமல் சிரிப்பும் கொம்மாளமுமாய் அவர்களுக்குப் பொழுது கழிந்து கொண்டிருந்தது.

ப்ளேபாய் க்ளப்'பின் பாரிஸ் கிளையில் முயல் வேஷம் அணிந்து மதுக் கோப்பைகளுடன் வந்த பெண்ணிடம், ''உனக்குத் தெரியுமா? இவன் ஒரு காஸனோவா அல்லது டான்யுவான்! இவனிடம் மயங்காத பெண்களே இருக்க முடியாது'' என்று தனஞ்செயனைச் சுட்டிக் காட்டி மைக்கேல் உரக்கக் கூறியபோது அவனுக்கு மது போதை தலைக்கேறி விட்டது என்பதைப் புரிந்து கொண்டு கவலைப் பட்டாள் அனுபமா.

முயல் வேஷமணிந்த பெண் தனஞ்செயனைப் பார்த்துச் சிரித்தாள். ''அதை நம்புவது சிரமமாக இல்லை'' என்றாள்.

''எங்கள் தேசத்தில் அர்ஜுனனுக்கு அப்படி ஒரு கீர்த்தி உண்டு'' என்றான் தனஞ்செயன். ''ஆனால் அவன் மாபெரும் வீரனும் கூட. அவனது மாற்றுப் பெயர்கள் பலவற்றுள் ஒன்றைத்தான் எனக்குச் சூட்டியிருக்கிறார்கள்!''

''ஓகோகோ! அப்படியானால் நீ பிறந்த உடனேயே 'இவன் பெரிய காஸனோவாவாக விளங்குவான்' என்று யாராவது ஜோஸியம் சொல்லியிருக்க வேண்டும், இல்லையா?'' என்று மைக்கேல் கேட்டு விட்டு அட்டகாசமாய்ச் சிரித்தான்.

''ஜோஸியரை அழைக்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை. பிறந்த இரண்டாம் நாள் என்னைக் குளிப்பாட்டி வரத் தூக்கிய நர்ஸைப் பார்த்து நான் கண்ணடித்தேனாம்!'' என்று மட்டமான சூழலுக்கு ஏற்ப ஒரு மட்டமான ஜோக் அடித்தான் தனஞ்செயன்.

''அப்படியானால் இதோ இந்தப் பெண்ணை உன்னால் கவர்ந்திழுக்க முடிகிறதா பார்ப்போம்!'' என்ற மைக்கேல் உபசாரிணிப் பெண்ணின் கரத்தைப் பற்றிக் கொண்டு அவளை அப்பால் வேறு அலுவல்களைக் கவனிக்கச் செல்ல விடாமல் தடுத்தான்.

நிலைமை விரசமாகப் போவதை உணர்ந்த அனுபமா அது அநாகரிகமாக மாறி அவமானமாக முடிவதற்கு முன் அங்கிருந்து கிளம்பி விடுவது உத்தமம் எனக் கருதி எழுந்து விட்டாள். ''ரொம்ப நேரமாகிறது. ஹோட்டலுக்குத் திரும்பலாம்'' என்று கூறிய படியே வாசலுக்கு நடந்து சென்றாள். தனஞ்செயனும் சற்றும் தாமதியாமல் பணத்தைத் தாராளமாகவே மேஜையின் மீது வைத்துவிட்டு அவளைப் பின் தொடர்ந்தான்.

''நியூயார்க்கில் நாம் முதன் முதலில் சந்தித்த தினம் நினைவு இருக்கிறதா? அவனுக்கு 'லிமிட்' தெரியும் என்று அன்றைக்குச் சிலாகித்துப் பேசினாயே?'' என்றாள் கேலியாக.

''அவரை நீங்கள் ஒன்றும் மட்டம் தட்ட வேண்டாம்'' என்று கோபத்

துடன் மொழிந்தாள் அவள். ''அவரது உள் மனத்தின் வேதனைகள் மது மயக்கத்தில் உருமாறி வெளிப்படுகின்றன என்பது புரியவில்லையா உங்களுக்கு? அவர் இப்படி அளவுக்கு அதிகமாகக் குடித்து நான் இன்றுவரை கண்டதேயில்லை. ஐஃபெல் டவரின் உயரத்தில் நீங்கள் என்னிடம் நடந்து கொண்ட விதம்தான் அவர் மனத்தைக் குடைந்து இப்படி நடந்து கொள்ளச் செய்கிறது. இருந்து கையைப் பிடித்து அவரை அழைத்து வரக் கூடாது? விருட்டென்று எழுந்து வந்து விட்டீர்களே...?''

தனஞ்செயனுக்குத் திகைப்பாயிருந்தது. 'வெறுப்படைந்து வெளியேறுகிறான் என்று எண்ணினால் அனுதாபம் அல்லவா பொங்குகிறது இவள் உள்ளத்தில்!'

இதற்குள் இலேசாகத் தள்ளாடிய படியே அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டான் மைக்கேல். அவனை அணைத்தாற்போல் பற்றிப் படிகளில் இறக்கி டாக்ஸிக்குக் கரிசனத்துடன் அழைத்துப் போனாள் அனுபமா.

இரவு இரண்டரை மணிக்கு மேல் தன் அறைக்கு வந்து சேர்ந்து படுக்கையில் விழுந்தான் தனஞ்செயன். அவன் என்றைக்குமே அதிகமாக மது அருந்தியதில்லை. இன்றைக்கும் ஜாக்கிரதையாகத்தான் இருந்தான். என்றாலும் இந்த அளவுக்குக்கூட இதற்கு முன்னால் அவன் மதுவை ருசித்ததில்லையாதலால் அதன் பலனை விரைவில் உணர ஆரம்பித்தான். அவன் உடல் இலேசாகிப் படுக்கையை விட்டு மெல்ல மேலே எழும்பி அந்தரத்தில் மிதக்கத் தொடங்கியது. அதில் அவன் ஒருவித சுகத்தையும் அதே சமயம் கலக்கத்தையும் உணர்ந்தான்.

''வேண்டாம் மைக்! பிளீஸ்! என்னைச் சும்மா விட மாட்டாயா? உனக்குப் போதை ஏறியிருக்கிறது. ஸ்திர புத்தியுடன் இருந்தால் நீ இப்படி நடந்து கொள்ளவே மாட்டாய்!'' என்று அனுபமாவின் குரல் கேட்டது.

இதுவும் மதுமயக்கத்தினால் ஏற்படும் பிரமை என்று கருதினான் தனஞ்செயன். அனுபமாவை அடைய முடியுமோ முடியாதோ என்ற கலக்கம், மைக்கேல் மீது உள்ள பொறாமை, அன்று மாலை, இரவு நேர நிகழ்ச்சிகள், போதை ஏற்றிய பது எல்லாமாகச் சேர்ந்து மாயத் தோற்றங்களை, கற்பனைகளை உண்டாக்குவதாய் நினைத்தான். ஆனால் அந்தக்



'' உனக்கு என்னால் வேலை பெற்றுத்தர முடியவில்லை என்றாலும் ''எல்லாருக்கும் வேலை வாய்ப்பு'' என்ற என் புத்தகத்தை வாங்க உனக்கு ஒரு பாங்கில் கடனுதவி அளிக்கச் சொல்கிறேன், சரிதானா ?''

குரல் மீண்டும் கேட்டது: ''மைக்! நோ! நோ! ப்ளீஸ்... நான் சொல்வதைக் கேளேன்! நாளைக்கு நீயே நல்ல நிலைமையில் இருக்கும்போது, வருத்தப்படக் கூடியதான காரியத்தை இன்று ஏன் செய்கிறாய்?''

அவள் குரல் மன்றாடியது. உரக்கப் பேசினால்தான் மது மயக்கத்தில் எதிரே உள்ளவனின் காதில் தான் கூறுவது ஏறும் என்ற நிலை ஒரு பக்கமும், இரைந்து பேசினால் நாலு பேருக்குக் கேட்டு விடுமோ, அதனால் தான் மட்டுமின்றி மைக்கேலும் அவமானமடைய நேரிடுமோ என்ற கவலை மறு பக்கமும் வாட்ட அவள் அஞ்சியும் வெட்கியும் கெஞ்சினாள்.

''என்னையும் காஸனோவாவாக நினைத்துக்கொள்'' என்று குழறுகிற குரலில் பேசினான் மைக்கேல். ''அல்லது என்னை... என்னை... அவன் பெயர் என்னவென்று சொன்னான்?... ஆ, அர்ஜுனன்! அர்ஜுனனாக நினைத்துக் கொள்!''

மேனாட்டு ஹோட்டல்களில் சுற்றுப் புறச் சுவர்கள் உறுதியாகவும் தடுப்புச் சுவர்கள் சிக்கனத்தைக் கருதி மெல்லியனவாகவும் அமைக்கப்படும். எனவே பக்கத்து அறையில் பேசப்பட்ட வார்த்தைகள் தெளிவாகக் கேட்டன தனஞ்செயனுக்கு.

அவன் மிகுந்த பிரயாசைப்பட்டுத் தன்னை உலுப்பி எழுப்பிக்கொண்டான். ஒளி மங்கிய சூழலும் அறிவு மழுங்கிய மூளையும் அவனைத் துரிதமாக இயங்க விடவில்லை. என்றாலும் தட்டுத் தடுமாறி அனுபமாவின் அறை வாசலுக்குச் சென்று கதவைத் திறக்க முயன்றான். உட்புறம் தாளிட்டிருந்தது!

(தொடரும்)

மலைக்க வைத்த மர்மங்கள் 4

# ஆகாயக் கொள்ளை

பி. ஓ. ஏ. ஸி. விமானங்களில் இருட்டுப் போவதைக் கண்டுபிடிப்பதற்காகவென்றே அவர்கள் லண்டனில் ஒரு துப்பறியும் நிபுணரையும், கராச்சியில் ஒரு துப்பறியும் நிபுணரையும் வைத்திருந்தார்கள். லண்டனில் இருந்தவர்தான் தலைமை அதிகாரி. அவர் பெயர் டோனல்ட் ஃபிஷ். கராச்சியில் இருந்தவரின் பெயர் புக்கானன்.

ஒரு நாள் லண்டன் விமான நிலையத்துக்கு ஒரு ஸ்விஸ் வியாபாரி ஒரு பெரிய மரப் பெட்டியுடன் வந்து சேர்ந்தார். அதில் ஐந்நூறு விலை உயர்ந்த கைக்கடிகாரங்கள் இருந்தன. தமக்குத் தாய்லாந்திலிருந்து அதற்கு ஆர்டர் கிடைத்திருப்பதாகவும், ஆகவே தம்மோடு கூடவே பெட்டியை எடுத்துச் செல்வதாகவும் சொன்னார். ஆனால் பிரயாணிகள் செல்லும் விமானத்தில் சாமான்களை எடுத்துச் செல்லக் கூடாது என்றும் அதைத் தனியாக பார்ஸல்களை எடுத்துச் செல்லும் விமானத்தில்தான் அனுப்பவேண்டும் என்றும் சொன்னார்கள். பாவம், அந்த ஸ்விஸ் வியாபாரிக்கு அந்தப் பெட்டியை விட்டுப் பிரியவே மனம் இல்லை. இருந்தாலும் வேறு வழியின்றி அதை அவர்களிடம் கொடுத்தார். அவருக்கு எதிரிலேயே கடிகாரங்கள் எண்ணப்பட்டன. பெட்டியில், வைக்கப்பட்டு, பெட்டி சீல் செய்யப்பட்டது. வியாபாரி வேறு சில நகர்களுக்கு விஜயம் செய்துவிட்டு, தாய்லாந்து சென்றார். அவர் போய்ச் சேர்வதற்கு நான்கு நாட்களுக்கு முன்னதாகவே கடிகாரங்கள் இருந்த பெட்டி தாய்லாந்தின் தலைநகரான பாங்காக் போய்ச் சேர்ந்தது. பி.ஓ.ஏ. ஸி. விமானங்களில் இத்தகைய விலையுயர்ந்த பார்ஸல்களைப் பாதுகாப்பதற்கென்றே அவற்றை இரும்புத் தகட்டினால் கட்டி, அதன் மீது இதற்கென்றே அவர்கள் பிரத்தியேகமாக வைத்திருந்த ஒரு ஸீலைக் குத்துவார்கள்.

நான்கு நாட்களுக்குப் பிறகு அந்த ஸ்விஸ் வியாபாரி தம் கடிகாரங்கள் பெட்டியை வாங்குவதற்குச் சென்றார். பெட்டியைச் சுற்றியிருந்த இரும்புத் தகடும், ஸீலும் சரியாகவே இருந்தன. பெட்டியின் எடையும் சரியாக இருந்தது.

வியாபாரி பெட்டியை எடுத்துக் கொண்டு வெளியே செல்லப் புறப்படுகையில் சுங்க அதிகாரி எதிரே வந்தார். வியாபாரி பெட்டியில் கடிகாரங்கள்தான் இருப்பதாகவும் பிரித்துப் பார்க்க வேண்டிய அவசியமில்லையென்றும் எவ்வளவோ சொல்லியும் பிரித்துப் பார்த்துத்தான் ஆக வேண்டும் என்று சுங்க அதிகாரி பிடிவாதம் பிடித்தார். வியாபாரி வேண்டா வெறுப்புடன் சம்மதிக்கப் பெட்டி திறந்து பார்க்கப்பட்டது.

என்ன ஆச்சரியம்! உள்ளே கடிகாரங்களைக் காணோம்! நிறைய கற்களும், ஒரு பழைய மைப் புட்டியும் தாம் இருந்தன.

இது விஷயம் உடனே கராச்சிக்குச் செல்ல அங்கிருந்த பி. ஓ. ஏ. ஸி. துப்பறியும் அதிகாரி புக்கானன் உடனே லண்டனில் இருந்த டோனல்ட் ஃபிஷ்ஷுக்குத் தந்தி அடித்தார். கடிகாரங்கள் இருந்த மரப்பெட்டியைத் தாம் லண்டனுக்கு அனுப்பி இருப்பதாகவும் அதை நன்கு பரிசீலித்துப் பார்க்கும்படியும் சொல்லியிருந்தார்.

மரப்பெட்டி டோனல்ட் ஃபிஷ்ஷின் மேஜையின்மீது இருந்தது. டோனல்ட் ஃபிஷ் அதையே அரை மணி நேரம் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். இரும்புத் தகடும், ஸீலும் சரியாகத்தான் இருந்தன. திருடன் எப்படிக் கடிகாரங்களைக் களவாடியிருப்பான் என்பது டோனல்ட் ஃபிஷ்ஷுக்கு முதலில் புரியவே இல்லை. ஆனால் சிறந்த துப்பறியும் நிபுணரான டோனல்ட் ஃபிஷ்ஷை ஏமாற்ற முடியுமா?

பெட்டியின் மீது ஒரு காகித லேபிள் ஒட்டப்பட்டிருந்தது. அது 6 அங்குல நீளமும் 4 அங்குல அகலமும் உள்ளதாக இருந்தது. அந்த லேபிளை அவர் மிக ஜாக்கிரதையாகப் பிரித்து எடுத்தார். லேபிள் மறைத்திருந்த பாகத்தில் கை போகும் அளவுக்கு மரப் பலகை அழகாகக் கத்தரிக்கப்பட்டு, பிறகு கத்தரித்த பாகத்தையே கொண்டு துவாரம் அடைக்கப்பட்டிருந்தது.

திருடன் கடிகாரங்களை எப்படித் திருடினான் என்பது கண்டுபிடிக்கப்பட்டு விட்டது. ஆனால் திருட்டு எங்கே நடந்தது என்று கண்டு பிடிக்கப்பட வேண்டாமா? இந்தக் காரியம் செய்ய எத்தனை மணி நேரம் ஆகும் என்று கண்டுபிடித்தால், திருட்டு எங்கே நடந்தது என்று கண்டுபிடித்து விடலாம். டோனல்ட் ஃபிஷ் அதே போன்ற இன்னொரு பெட்டியை வரவழைத்தார். அதன் மீது அதேமாதிரி ஒரு லேபிளை ஒட்டினார். பிறகு லேபிளைப் பிரித்து ஒரு சிறு துவாரம் போட்டார். துவாரம் போட எத்தனை மணி நேரம் ஆகிறது என்று கணக்குப் பார்த்தார். சரியாக மூன்று மணி நேரம் ஆயிற்று. அப்படியானால் பார்சல் எந்த விமான நிலையத்தில் மூன்று மணி நேரத்துக்கு மேல் இருந்ததோ அங்குதான் களவு போயிருக்க வேண்டும். லண்டனிலிருந்து பாங்காக் வரை எத்தனையோ விமான நிலையங்கள் வருகின்றன. ஆனால் ஒன்றிலும் விமானம் அரை மணி நேரத்துக்குமேல் தங்குவது கிடையாது. ஆகவே பாங்காக்கில்தான் திருட்டு நடந்திருக்க வேண்டும் என்று தீர்மானித்து, கராச்சியிலிருந்த புக்கானுக்கு பாங்காக் சென்று விசாரணை செய்யுமாறு தகவல் கொடுத்தார்.

புக்கானன் பாங்காக் சென்றார். மூன்று வார காலம் விடாமல் சாமான்கள் வைக்கப்படும் கிடங்கில் ஒளிந்து கொண்டு பார்த்தார். மூன்று வார காலம் ஒன்றுமே நடக்கவில்லை. புக்கானன் பொறுமையை இழக்கும் நிலையை அடைந்தார். 'நானே கராச்சி திரும்ப வேண்டியதுதான்' என்று தீர்மானித்துக் கொண்டு அன்றிரவு அங்கு ஒளிந்து கொண்டிருந்தார். முன்போலவே கடிகாரங்களைக் கொண்ட இரண்டு மரப் பெட்டிகள் அங்கு வந்து இறங்கியிருந்தன.



• நாடோடி •

திடீரென்று தரையில் சாக்கடையை மூடுவதற்காகப் போடப்பட்டிருந்த இரும்பு மூடி மெள்ள வெளியே திறந்தது. உள்ளே இருந்து ஒரு மனிதன் வெளியே வந்தான். அவன் கையில் ஒரு சிறு ரம்பம் இருந்தது. அவன் என்னதான் செய்கிறான் பார்ப்போம் என்று புக்கானன் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றார். அவன் கடிகாரங்கள் இருந்த மரப்பெட்டியின் பக்கம் சென்றான். லேபிளை மெள்ளப் பிரித்தான். பிறகு கையிலிருந்த ரம்பத்தினால் பெட்டியைத் துவாரம் செய்ய ஆரம்பித்தான். அரை மணி நேரம் புக்கானன் அவனையே பார்த்துக் கொண்டு நின்றார். பிறகு ஓடி வந்து அவனைப் பிடித்துக் கொண்டார். அவன் போலீசாரிடம் ஒப்படைக்கப்பட்டதும், பழைய பெட்டியிலிருந்து கடிகாரங்களைத் திருடியதும் தான்தான் என்று ஒப்புக் கொண்டான்.

ஒரு வாரம் கழிந்து டோனல்ட் ஃபிஷ்ஷும் புக்கானனும் லண்டனில் சந்தித்தார்கள்.

''அவனை நீங்கள் உடனே பிடிப்பதற்கு என்ன? எதற்காக வீணாக அவன் அரை மணி நேரம் பாடுபடும்படி செய்தீர்கள்?'' என்று கேட்டார் டோனல்ட் ஃபிஷ்.

அதற்கு புக்கானன், ''மூன்று வார காலம் காத்துக் கொண்டிருந்தேனே. அவன் தன் வேலையை எப்படித்தான் செய்கிறான் என்று நான் தெரிந்து கொள்ள வேண்டாமா?'' என்று வேடிக்கையாகக் கேட்டார்.

# “மொரமொரப்பாகவும் அதிமெல்லியதாகவும் வடாம் தயாரிக்கும் இரகசியம், பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்”

என்கிறார் திருமதி லட்சுமி சாமா, ‘ஸோரெண்டோ’, மவுண்ட் ப்ளஸண்ட் ரோடு, பம்பாய் – 6.



கார்ன் ப்ராடக்ட்ஸ்
தேர்ந்தெடுத்த
பரிசு - பெற்ற
பக்குவ முறை

## வடாம்

தயாரிக்க உதவுவது
பிரவுன் &
போல்ஸன்
கார்ன்ஃப்ளவர்.






பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர் சமோசா, பட்டீஸ் ஆகியவற்றை அதிமெல்லியதாகவும் மொரமொரப்பாகவும் ஆக்குகின்றது. (இரண்டு கோப்பை சாதா மாவுக்கு 1 டேபிள் ஸ்பூன் அளவு போதுமானது.) குழைவான சுவைமிகு சூப், கிரேவி ஆகியவற்றைக் கெட்டியாகத் தயாரிக்க உதவும். பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர் இளங் குழந்தைகள், நோயாளிகள் ஆகியோருக்குத் தெம்பு தரவும் ஆரோக்கிய மூட்டவும் சிறந்தது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப் பட்டதால் கார்ன்ஃப்ளவர்களில் மிகவும் சிறந்தது. பிரவுன் & போல்ஸன். அட்டைப் பெட்டிகளிலும் கிடைக்கிறது.

**பக்குவ முறை:**

1 கோப்பை பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்
6 கோப்பை தண்ணீர்
1 முதல் 1½ கோப்பை மோர்
4-5 பச்சைமிளகாய்
சிறிது பெருங்காயம்
1 மேசைக் கரண்டி (தலைதட்டிய அளவு) உப்பு (அல்லது சுவைக்கு ஏற்ற அளவு.)

1 தண்ணீரைக் கொதிக்க விடவும். அடுப்பின் சூட்டைக் குறைக்கவும். பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவரை மோருடன் கலக்கவும். தண்ணீர் சேர்க்கவும். நன்கு கிளறவும். அத்துடன் உப்பு, பெருங்காயம் மற்றும் அரைத்த மிளகாயைக் கூட்டவும். சில நிமிடங்கள் கொதிக்க விடவும். பின்னர் கலவையைக் குளிர விடவும்.

2 பிறகு சுத்தமான போலிதீன் தாளை வெய்யிலில் பரப்பவும். அதன் மீது ஒரு மேசைக்கரண்டியளவு கலவையிலிருந்து எடுத்து ஊற்றவும். இவ்வாறே ஒவ்வொரு மேசைக் கரண்டியாக கலவை முழுவதையும் தாளின்மீது இடைவெளி விட்டு ஊற்றவும். மாலைவரையில் வெய்யிலில் காயட்டும். மறு நாள் காலை தாளிலிருந்து வடாம் பிரித்து எடுத்து, பெரிய தட்டில் புரட்டிப் போடவும். முற்றிலும் காயும் வரையில் இரண்டொரு நாட்களுக்கு வெய்யிலில் நன்கு உலர விடவும்.

3 காற்றுப்புகா டப்பாவில் வடாம் எடுத்து வைக்கவும். தேவைப்படி எண்ணெயில் பொரிக்கவும். வாணலியில் எண்ணெயை விட்டு சூடாக்கி, வடாம் பொரிக்கவும். பழுப்பாக மாறும் முன்பு வடாம் பொரித்து எடுக்கவும்.

---

**உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.**



**கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். சோமானி மார்க்,
பம்பாய் – 400 001.

OBM 0621 R-TM

# கோடை குளிர்ந்தது; பசி பறந்தது!

புத்தாண்டு தினத்தன்று வால்குடி திரு ஜெயராமன் அவர்களுக்கு டெலிஃபோன் செய்து வாழ்த்தினேன். ''ஆனந்த வருஷம் ஆனந்தமாக விளங்கட்டும் உங்களுக்கு'' என்று அவர் பதிலுக்குச் சொன்னார். ''அதற்கென்ன, நீங்கள் வாசிப்பதைக் கேட்டுக் கொண்டே யிருந்தால் ஆனந்தத்துக்கு என்ன குறைச்சல்?'' என்றேன்.

மும்மடங்கு ஆனந்தமாகவே அந்த வாய்ப்பு வெகு சீக்கிரம் கிட்டியது! அதாவது ஜெயராமன், ரகு பக்கவாத்தியங்களுடன், ஸ்ரீ செம்மங்குடி கச்சேரியை ஏப்ரல் 16ல் வீனஸ் காலனியில் கேட்க முடிந்தது.

வீனஸ் காலனி, ஆஸ்திக சமாஜத்துக்குப் போய் அனுபவப்பட்டவர்கள் புறப்படுவதற்கு முன்னால் இரண்டு விஷயங்களை முக்கியமாகக் கவனித்துக் கொள்வார்கள். தீபாராதனை ஆனபிறகு தட்டுத் தூக்கி வரும்போது போடச் சில்லறை இருக்கிறதா என்று பார்த்துக் கொள்வார்கள். கொஞ்சம் பெரிய மனிதர்கள் ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய் நோட்டு இருக்கிறதா என்று பர்ஸை நோட்டம் விடுவார்கள். இல்லாதபோனால் ஐந்து பத்து என்று இழக்க நேரிடும்! அல்லது கல்லுளிமங்களாக நெஞ்சோடு கைகளை இறுக்கிக்கொண்டு உட்கார்ந்திருக்கும் தைரியமாவது வேண்டும்!

இரண்டாவதாக ரசிகர்கள் முன் ஜாக்கிரதையாக விசிறியைக் கையோடு எடுத்துப் போவார்கள்! மின்விசிறி கிடையாது அங்கே. அன்றைக்கென்று பார்த்து 104 டிகிரி வெய்யில். ஆனால் மறுநாள் காலை பேப்பரைப் பார்த்த பிறகுதான் ''அடடா! புழுக்கமாவது புழுக்கம்!'' என்று அலுத்துக்கொள்ளத் தோன்றியதே ஒழிய கச்சேரியைக் கேட்டுக்கொண்டிருந்தபோது அந்தப் பிரக்ஞையே இல்லை!

செம்மங்குடி அவர்கள் அபாரமாகப் பாடுவார், சங்கீதத்தின் இலக்கண அமைப்பையும் இலக்கிய அழகையும் கரை கண்டவர் என்பதெல்லாம் எல்லாருக்கும் தெரிந்ததுதான். இப்போதெல்லாம் அதிகமாகக் கச்சேரிகளை ஒத்துக்கொள்வதில்லை என்பதும் அவரது ரசிகர்கள் அறிந்ததுதான். தமக்கு வயதாகி வருவதாகவும் முன்போலெல்லாம் பாடும் அளவுக்கு உடம்பு ஒத்துழைப்பதில்லை என்பதாகவும் இளைஞர்களுக்கு வாய்ப்புத் தர வேண்டும் என்பதாகவும் சொல்லி ஒதுங்கிக் கொள்ளவே விரும்புகிறார். ஆனாலும் அவரை யார் விட்டார்கள்! ரொம்ப வற்புறுத்தல் தாங்காமல் ஒப்புக்கொண்டு, 'கான்ஸல்' பண்ணாமல் மேடையேறியும் விட்டாரென்றால் பிறகு மனப்பூர்வமாகப் பாடுகிறாரே, அதைத்தான் குறிப்பிட வேண்டும். மூக்கோ, தொண்டையோ, சரீரமோ, சாரீரமோ அது என்ன இடக்கானாலும் சரி, 'உனக்காச்ச எனக்காச்ச' என்று அத்துடன் போராடி அவர் வெகு சீக்கிரமே வெற்றி பெறுவதைப் பார்க்க மலைப்பாக இருக்கிறது. சாரீரம் சிலருக்கு இயல்பாக அமையும். அப்படி இயல்பாக அமையாது போனாலும் இடைவிடாத பயிற்சியினாலும் மனோசக்தியினாலும் அதை நம் வசப்படுத்த முடியும் என்று செம்மங்குடி அடிக்கடி கூறுவார். இதற்கு அவரே பிரத்யட்ச சாட்சி. வயது ஏற ஏற ராக ஆலாபனையும் நிரவலும் குறைத்துக் கொண்டிருக்கிறார் என்பது நமக்குத் தெரிகிறது. ஆனால் அவரது தனிப்பாணி என்னும் சர்க்கரை சேர்த்துச்



ஸ்ரீ சிவராமன்     ஸ்ரீ ரகு



வால்குடி ஸ்ரீ ஜெயராமன்

ஸ்ரீ செம்மங்குடி
(திரு ராம்கோபால் வரைந்த சித்திரம்)





**மரத்தின் நண்பர்கள்**

அமெரிக்காவில் கனெக்டிகெட்டில் 500 ஆண்டுகள் வாழக்கூடிய ஒரு பெரிய மரம், கட்டிடம் கட்டுவதற்காக வெட்டப்படுவதைத் தடுக்க அந்த ஊரில் உள்ள மக்கள் மரத்தில் ஏறி உட்கார்ந்து ஆர்ப்பாட்டம் செய்தார்கள். இதனால் மரம் காப்பாற்றப்பட்டது.

டைம் - பாலி

---

சாறு பிழிந்து தந்து விடுகிறாரே, போதாதா? அப்புறம் அந்த ஸ்வரங்கள்! எந்த ராக, தாளத்தில் அமைந்த எந்தக் கீர்த்தனையானாலும் அதனூடே அவர் வழங்கும் கற்பனை ஸ்வரக் கோவைகள்! எப்படித்தான் இம்மாதிரி அலைஅலையாகப் பெருக்கெடுத்து வருகின்றனவோ என்று தோன்றும்.

அலைகடல் ஓரத்தில் நிற்கும்போது ஒரு சமயம் பெரிய அலையாக வந்து நம்மீது முட்டி மோதி விளையாடும்; இன்னொரு சமயம் மெல்லலை வந்து பாதங்களைத் தொட்டுச் சிரித்து விட்டுப் போகும்; வேறு ஒரு சமயம் நமக்குச் சற்று முன்னாலேயே பொங்கி விழுந்து நீர்த் துளிகளைத் தெளித்து மகிழ்விக்கும். இம்மாதிரியான ஒரு சுகானுபவம் அல்லவா ஏற்படுகிறது செம்மங்குடியின் ஸ்வரப் பிரஸ்தாரங்களைக் கேட்கும்போது! அத்துடன் ஒரு நியதிக்கு உட்பட்ட ஓங்கார அலையோசையாக ரகுவின் அடக்கமான வாசிப்பும் இனிய கடற்காற்றாக ஜெயராமனின் வயலின் ஒத்துழைப்பும் சேர்ந்து கொள்ளும்போது கேட்க வேண்டுமா? ஆனந்த பரவசம்தான்!

* * *

கிளப் என்றால் காப்பிக் கிளப்பா சீட்டாட்டக் கிளப்பா என்றுதான் கேட்பார்கள். ஆனால் சென்னையில் சங்கீத கிளப் ஒன்றும் நடக்கிறது. 'செவிக்கு உணவில்லாதபோது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்' என்ற வசனத்தைப் பொய்யாக்கி அங்கத்தினர்களுக்குப் பலமான சாப்பாடே போடுகிறார்கள், கச்சேரி முடிந்த பிறகு!

அசோகா ஹோட்டல் 'லிட்டில் ஹட்'டில் கச்சேரி நடக்கும்போது எட்டு மணிக்கு மேல் அங்கத்தினர் பலருக்கு — பரம ரசிகர்களேயானாலும் — இன்று என்ன மெனு என்ற கவலை வந்துவிடுவது இயல்பு. ரசிகர்கள் என்றால் சாப்பாட்டிலும் ரசிகர்களாகத்தானே இருக்க வேண்டும்! ஆனால் அண்மையில் லால்குடி திரு ஜெயராமன் அங்கே வாசித்த போது நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. ஒன்பதே கால் மணிக்கு மேல் 'முடித்து விடலாமா' என்று ஜாடையாகக் கலைஞர் கேட்க, காரியதரிசி ஸ்ரீ நடராஜன், ''தயவு செய்து இன்னும் ஒன்று'' என்று. வேண்டிக் கொண்டதானது அங்கத்தினர்களின் மன நிலையை அப்படியே பிரதிபலித்தது.

ஜெயராமனுடைய விரல்களிலே ஏதாவது விசேஷம் இருக்குமோ என்பதாக நினைத்து ஒரு தடவை கைகூப்புவதற்குப் பதில் மேனாட்டு முறையில் கை குலுக்கிப் பார்த்தேன். எல்லோருக்கும் உள்ளது போல் சர்வ சாதாரணமான விரல்கள்தாம். ஆனால் வயலின் தந்திகள் மீதாக அந்த விரல்கள் அசையும்போது அவை எப்படியோ ஒரு மாயாஜால சக்தியைப் பெற்று விடுகின்றன. ராக பாவங்கள் மட்டுமின்றிக் கீர்த்தனைகளின் அர்த்த பாவங்கள் கூட பல சந்தர்ப்பங்களில் விகசிக்கும்படியாக வயலின் நாதம் எழும்புவது அவர் எந்த அளவுக்கு சாகித்தியத்துடன் மனமொன்றி விடுகிறார் என்பதை உணர்த்தும். ஜெயராமன் உண்மையில் நன்றாகக் குரலெடுத்துப் பாடவும் கூடியவர்தான். மியூஸிக் கிளப்பில், 'லால்குடி பஞ்சரத்னக் கீர்த்தனையைப் பாடிக் கொண்டே வாசிக்கலாமே' என்ற கோரிக்கையை அடக்கம் காரணமாக அவர் ஏற்கவில்லை.

அது சரி, அவராவது தியாகையர் பரம்பரையில் வந்தவர். ஆனால் உமையாள்புரம் திரு சிவராமன் குடும்பச் சொத்து என்பதாக லய ஞானத்தைப் பெற்றவர் அல்ல. அவர் தகப்பனார் எம். பி. பி.எஸ். சிவராமனை வழக்கறிஞர் தொழிலுக்குத்தான் படிக்க வைத்தார். ஆனால் லய வித்தியாசங்களின் வாதப் பிரதிவாதங்களை மேடையில் நிகழ்த்த வேண்டும் என்றிருக்கும்போது அவர் ஏன் வழக்காடக் கோர்ட்டுக்குப் போகப் போகிறார்! ஏதோ ஒரு திருவிழாவுக்குப் போனபோது சிறுவன் சிவராமன் ஒரு கஞ்சிராவை ஆசைப்பட்டுக் கேட்டு வாங்கிக் கொண்டான். அன்று விளையாட்டாகத் தொடங்கிய பயிற்சி கச்சேரியில் முடிந்தது. பின்னர் புதிய அத்தியாயம் ஆரம்பமாகியது. சிவராமனுக்கு முதல் நாள் அரங்கேற்றம், மறுநாள் பி. எல். பரீட்சை! இரண்டிலும் தேறிவிட்டார்!

அரங்கேற்ற நாளிலிருந்து இன்று கிறங்க வைக்கும் நாளுக்கு வந்தாகி விட்டது! வயலின் வாசிப்பை மீறாமல், விட்டுக் கொடுக்கவும் செய்யாமல், அவர் விரல்கள் மிருதங்கத்தை மட்டுமா, நமது மனத்தையும் அல்லவா படாத பாடு படுத்தி விடுகின்றன! வான வில்லின் வர்ண பேதங்களைப் போல் விதம் விதமான சொற்கட்டுக்களை எப்படி அள்ளித் தெளிக்கிறார்!

அன்று இரண்டாவது பக்கவாத்தியமாகக் கஞ்சிரா வாசித்தது திரு நாகராஜன். 'பாப்பா' திரு வெங்கடராமய்யா அவர்களின் புதல்வர். வயலினுக்காகவே வாழ்ந்தவரின் மகன் வயலினுக்கு வாசித்தார். எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று தெரியாமல் போகுமா அவருக்கு? அவசியமான இடங்களில் மட்டும் சேர்ந்து கொண்டு திறமை பளிச்சிடச் செய்தவர், தனியின் போது பாய்ந்தால் புலி என உணர்த்தினார்!

கண்களை மூடிக் கொண்டால் இரட்டை வயலின் போன்ற பிரமையை ஏற்படுத்தும் ஜெயராமனின் வாசிப்புக்கு இரண்டு பேரும் பக்கத் துணையாக இருந்து ஜமாய்த்து விட்டார்கள் போங்கள்! — **குட்டிகிருஷ்ணன்**



1. கோபால் போஸ்



2. பி. பி. பட்டேல்



3. எம். எச். கிர்மானி



4. மதன்லால் சர்மா

# பஞ்சபாண்டவர்கள் அறிமுகம்!

தொடர்ச்சியாக மூன்று வெற்றி வாகை களைச் சூடிக்கொண்ட வாடேகர் மீண்டும் இங்கிலாந்துக்கு விமானம் ஏறியிருக்கிறார்! இம்முறை ஐந்து இந்திய இளைஞர்களுக்கு 'டெஸ்ட் குல்லாய்' கிடைக்க வாய்ப்பிருக்கிறது. அதாவது டெஸ்ட் கிரிக்கெட்டுக்கு இவர்கள் அறிமுகமாகலாம். அவர்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்கிறோம்.

**கோபால் போஸ் :** வங்கம் தந்த ஆரம்ப பாட்ஸ்மன். கண்ணாடி அணிந்திருக்கிறாரே என்று யாரும் கவலைப்பட வேண்டாம். இவரது பாட்டிங் தரமானது. இருபது வயது இளைஞர். 1968ம் வருஷம் கோபால் போஸ் 'ஆப்ஸ்பின்னராக'க் கிரிக்கெட் வாழ்க்கையைத் தொடங்கினார். ஆனால் இவரது சிறப்பு பாட்டிங் கலையில் துலங்கியது. தெற்குப் பிரிவுக் கோஷ்டிக்கெதிராக கோபால் போஸ் சதம் போட்டார். இலங்கையில் முதல் அன்அபிஷியல் டெஸ்டில் 104 எடுத்தது இவரது பாட்டிங் திறமையை உறுதிப் படுத்தியது.

**பி. பி. பட்டேல்:** நீண்ட மீசையை முறுக்கிக் கொண்டு கர்நாடகத்திலிருந்து ரஞ்சித் கோப்பை முதல் வெற்றி தந்த களிப்புடன் லண்டனுக்கு விமானமேறியிருக்கிறார் பி.பி.பட்டேல். இருபது வயதான பி. பி. பட்டேல், தமது முதல் மாட்சிலேயே புகழ்பெற்ற பம்பாய்க் கோஷ்டிக்கு எதிராக 'செஞ்சுரி' போட்டவர். இலங்கைக்குச் சென்ற வெற்றி கோஷ்டியிலும் பி. பி. பட்டேல் இடம் பெற்றிருந்தார். 1968ம் ஆண்டு ஆஸ்திரேலியாவுக்குச் சென்ற பள்ளிச் சிறுவர்கள் கோஷ்டியில் இவரும் ஒருவர். டெல்லிக்கு எதிராக ரஞ்சிக் கோப்பைப் பந்தயத்தில் பி.பி. பட்டேல் 168 ரன்கள் எடுத்திருக்கிறார்.. . பீல்டிங்கிலும் கெட்டிக்காரர்!

**எம். எச். கிர்மானி :** கர்நாடகம் தந்துள்ள விக்கெட் கீப்பர். கர்நாடகத்துக்கும் ராஜஸ்தானுக்கும் நடைபெற்ற ரஞ்சித் கோப்பை இறுதி ஆட்டத்தில் இவரது 'விக்கெட் கீப்பிங்' திறமை சுடர் விட்டுப் பிரகாசித்தது. 1966ம் வருஷம் இங்கிலாந்துக்குப் பிரயாணமான இந்தியப் பள்ளி மாணவர்களில் இவரும் ஒருவர். 1971ம் ஆண்டு இங்கிலாந்துக்குச் சென்ற கோஷ்டியில் கிர்மானி இடம் பெற்றிருந்தும் டெஸ்டில் இறங்கச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. சந்திரசேகரின் லெக்சைட் பௌலிங்குக்குக் கிர்மானியின் விக்கெட் கீப்பிங் இணைந்து சோபிப்பதை அனைவருமே பாராட்டுகிறார்கள்.

**மதன்லால் சர்மா :** தலைநகரம் தந்துள்ள 'பௌலிங்' மன்னர்! கடுமையான உழைப்பினாலே இந்தியக் கோஷ்டியிலே இவர் இடம் பெற்றிருக்கிறார். இருபத்து மூன்று வயதான இந்த இளைஞர் தமது பௌலிங் திறமையினால் இலங்கையில் இரண்டாவது அன்அபிஷியல் டெஸ்ட் வெற்றியைப் பெற்றுத் தந்தவர்! இவரது 'அவுட்ஸ்விங்கர்' விசேஷமானது. நல்ல பாட்ஸ்மனும் கூட! முதல்தர கிரிக்கெட்டுகளில் ஐந்து செஞ்சுரிகள் இவரது பாட்டிங் திறமையைப் பறைசாற்றுகின்றன. எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருப்பார். இடுக்கண் காலில் புண்களாக வந்தும் இவர் மந்தகாசத்துடன் திகழ்ந்தது இலங்கையில் இந்தியக் கோஷ்டி மானேஜரையே அயர வைத்தது.

**கதிர் எஸ். நாயக் :** கிரிக்கெட்டில் பம்பாய் மண்ணுக்குத் தனி கௌரவம் உண்டு. இந்தியக் கோஷ்டி மேற்கிந்தியத் தீவில் சக்கைப்போடு போட்டுக் கொண்டிருந்த போது பம்பாய்க் கோஷ்டிக்கு ரஞ்சித் கோப்பைப் பந்தயங்களில் வாடேகர் இல்லாக் குறையை இட்டு நிரப்பி வெற்றி தேடித் தந்தார், இருபத்தேழு வயதான நாயக்.

இந்தப் பஞ்சபாண்டவர் அனைவருக்கும் டெஸ்ட் பந்தயங்களில் ஆடும் வாய்ப்பு இங்கிலாந்தில் கிட்டும் என்றும் அவர்கள் சக்கைப் போடு போடுவார்கள் என்றும் நம்பி வாழ்த்துவோம். **—குண்டுமணி**



# சிறுதரத் தொழிலதிபர்களுக்கு

# பெருமளவு உதவி!

நீங்கள் ஒரு சிறுதரத் தொழிலதிபராயிருந்தால் அல்லது அவ்விதம் ஆவதற்கு விரும்பினுல், விரைந்து வந்து உங்கள் திட்டங்கள் பற்றி யூகோபாங்கின் எந்த ஒரு கிளையுடனுவது கலந்தாலோசியுங்கள்.

ரூ.10,000 வரையிலான கடன்களுக்கு 7½% வருட வட்டியும், ரூ.10,000 லிருந்து ரூ. 25,000 வரை 8½% வருட வட்டியும், ரூ. 25,000 முதல் 1,00,000 வரை 9½% வருட வட்டியுமே நீங்கள் கொடுக்க வேண்டி வரும். ரூ. 1,00,000க்கு மேலான கடன்கள் பற்றிய விவரங்களுக்கு அருகிலுள்ள எங்களது கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

UCOC.21 TAM

தாங்களே தங்களுக்கு உதவ மக்களுக்கு
லாபகரமாக உதவுகிறது




# யூனிடெட் கமர்ஷியல் பாங்க்

# தீர்க்க சுமங்கலி

நம் நாட்டுப் பெண்கள் திருப்திப்படும் விதத்தில் திரைக் கதையைத் தயாரித்திருக்கிறார்கள். ஆரம்பத்தில் தகப்பனார் தம் குழந்தைகளிடம் கண்டிப்பும் கறாருமாக இருக்கிறார். இடைவேளைக்குப் பிறகு இளைஞர் சமுதாயத்தின் கை ஓங்கிவிடுகிறது; அப்பா அடங்கிவிடுகிறார் !

கே. ஆர். விஜயா தீர்க்கசுமங்கலி. அவருக்குப் படம் முழுவதும் சான்ஸ். கண்டிப்புக்காரக் கணவன், வீட்டுக் கணக்கு கேட்கும் பொழுதெல்லாம் தன் கவர்ச்சிப் புன்னகையை வீசி அவனை வெல்வதில் தீர்க்க சுமங்கலி மிகவும் கெட்டிக்காரி. நோயின் வேதனை, சீற்றம், சாந்தம், அன்பு, பாசம், பரிவு அனைத்தையும் கே. ஆர். விஜயாவிடம் காணும்போது பரிபூரண நிறைவு ஏற்படுகிறது.

முத்துராமன் தாம் ஏற்ற பாத்திரத்தை நன்கு புரிந்து கொண்டு மிகவும் பொருத்தமாக நடிக்கிறார். அவர் ஆற்றல் நாளுக்கு நாள் மெருகேறிச் சோபித்துக் கொண்டிருக்கிறது.

தீர்க்கசுமங்கலியின் மூத்த மகன் சிவகுமார் நன்றாய் நடித்திருக்கிறார். ஜெயசுதா அவர் காதலியாக நடிக்கிறார். திரை உலக நியதியைப் பூர்த்தி செய்து தொலைக்கக் கிளப் டான்சில் ஆடை குறைப்புடன் கன்னாபின்னாவென்று குதித்தாலும், பிறகு வீட்டுக்கு வந்த மருமகளாக ஜெயசுதா நன்றாக நடித்திருக்கிறார். ஜெயசித்ராவுக்குக் கௌரவ வேடமானாலும் தம் உணர்ச்சியைக் கொட்டி நடிக்க நல்ல வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

மேஜர் சுந்தரராஜன் வழக்கம்போல் அப்பாவாக வந்து யாரையும் மிரட்டி உருட்டாமல் மனைவிக்கு அடங்கிய கணவனாக வந்து சமர்த்தாக நடிக்கிறார் ! வி. கே. ராமசாமி நகைச்சுவைக்கு ஆதாரமாயிருப்பதோடு, இரண்டாந்தாரத்தின் பேச்சைக் கேட்டுக் கொண்டு பெற்ற மகனையே துன்புறுத்துகிறார்.

படத்தின் ஒளிப்பதிவும் ''தீர்க்கசுமங்கலி வாழ்கவே'' என்ற பாட்டும் நன்றாயிருக்கின்றன. திரைக்கதை டைரக்ஷன் ஏ. சி. திரிலோகசந்தர்; சிறப்பாகச் செய்திருக்கிறார். விசாலாட்சி கம்பைன்ஸ் தயாரிப்பான இப்படத்தில் நடிகர்கள் அதிகம்; திரைக்கதை மிகப் பெரியது.

கடைசியில், அப்பா அம்மா இருவரும் இறந்து போனாலும் அது ஒரு சோக முடிவாகத் தோன்றாமல் பதியை மரணத்தில் சில நிமிஷங்களில் முந்திவிட்ட பத்தினியினால் கதையும் படம் பார்க்க வரும் பெண்மணிகளின் மனமும் நிறைவு பெற வழி செய்திருக்கின்றனர் !

-காந்தன்



# ஆசைகள் மடிவதில்லை

17

கதை: கௌசிகன்

சித்திரம்: சூர்யா..



















... எனக்கும் சோமுவுக்குமிடையே யுள்ள நெருக்கம் பற்றித் தனக்குத் தெரியுமென்றும் தன்னை உடனே வந்து சந்திக்குமாறும் போனில் கூறினர் ...


நீங்கள் முரளியின் அறைக்குச் சென்ற போது அவன் அங்கு கோரமாகக் கொல்லப்பட்டுக் கிடந்தான் என்கிறீர்கள், இல்லையா? இதே மாதிரித் தானே மல்லிகாவும் கூறினள்? விந்தை யாக இருக்கிறதில்லையா?


... உங்கள் கணவர் கொலை செய்யப் பட்ட அன்று அவரது அழைப்பின் பேரில் அங்கு சென்ற மல்லிகாவிற்கும் இதே அனுபவம் தானே ஏற்பட்டது? இது உங்களுக்கும் தெரியும் ...


... ஆனல் அதை நீங்கள் மறைத்து விட்டு மாற்றிக் கூறினீர்கள். ஏன்? உங்கள் கணவரின் அறைக்குள் நீங்கள் பார்த்தது யாரை? அவர், அந்த நபர் – இங்கு, இந்த அறையில் இருக்கிறாரா? சொல் லுங்கள் ...


சதீஷின் கனீரென்ற குரலுக்குப் பதிலாக அங்கு மரண அமைதி நிலவியது. மேனகாவின் இதழ்த் துடிப்புக் கூடக் கேட்க வில்லை. திடீரென்று மேனகா அலறினள்..
நான் சொல்லி விடுகிறேன்... அங்கு... அப்போது... என் கணவரின் அறையில்...


அவள் தன் பேச்சை முடிக்கவிடாமல் ஒரே சமயத்தில் இரு துப்பாக்கி வெடிகள் அதிர்ந்தன.
டுமீல்
டுமீல்
தொடரும்

# வீட்டுக்கரசியா? விளையாட்டுப் பொம்மையா?

சீதா

“சாரு! எங்கேடீ போய்விட்டு இத்தனை நாழி கழிச்சு வரே?'' என்று கேட்டாள் அத்தை அன்னபூர்ணம்மாள்.

''மணி இப்பத் தானே ஒன்பதரையாகிறது? இது ஒரு நாழியா?'' என்று பதில் சொன்னாள் சாரு.

''இந்தக் காலத்துப் பெண்களுக்கு ராத்திரி பன்னிரண்டு மணியானாலும் பயமில்லை. ஒண்டியா எங்கேவேணுமானாலும் சுற்றிவிட்டு வரதுகள். வீட்டில் கேட்பார் கிடையாது!'' என்று முணுமுணுத்தாள் அத்தை.

கூட இருந்த ஹேமா ''நாங்க எங்கேயும் சுற்றி விட்டு வரல்லே. எங்க தோழி ஒரு புது வித நாடகத்திலே நடிச்சா. அதுக்கு வரச் சொல்லி அழைச்சிருந்தா. போய்விட்டு வரோம்!'' என்றாள்.

''அது என்ன புதுவிதமான நாடகம்?'' என்று கேட்டான் சுந்தர்.

''சென்னையில் தென்னிந்திய பிலிம்சேம்பர் இருபது இருபத்திரண்டு வயசுக்கு உட்பட்டவர்களுக்குச் சினிமாவிலே நடிப்பதற்குப் பயிற்சி அளிக்க ஒரு பள்ளிக்கூடம் நடத்துகிறது. சினிமாவிலே நடிப்புக்குக் குரல் இயல்பாக நாம் வீட்டிலே பேசுகிற அளவு இருந்தால் போதுமில்லையா? அந்த அளவு குரலிலே பல பாவ வேறுபாடுகளைக் காட்டி இயல்பாக நடிக்கக் கற்றுத் தரா! அந்தப் பயிற்சி பெற்ற மாணவ மாணவிகள் இப்ஸனின் 'டால்ஸ் ஹவுஸ்' என்ற நாடகத்தைத் தமிழில் போட்டுக் காட்டினா!''

''ஓ! இப்ஸன் நாடகமா? டால்ஸ் ஹவுஸா? அதுதான் ஐரோப்பாவிலே பெண்களுக்கு விடுதலை வாங்கித் தந்தது என்று சொல்லுவா....!'' என்றார் சங்கரய்யர்.

''பெண்கள் விடுதலையை நோக்கமாகக் கொண்டு அவர் அந்த நாடகத்தை எழுதவில்லை என்று இப்ஸனே சொல்லியிருக்கிறாராம்!'' என்றாள் சாரு.

''நோக்கம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் அன்று பெண்களுக்கு இருந்த நிலையை அப்படியே பிரதிபலிக்க நாடகம் எழுதிவிட்டார். அது பிரபலமாகிப் பெண்களுக்கு வேண்டிய உரிமைகளை வாங்கித் தந்துவிட்டது!'' என்றார் சங்கரய்யர்.

''அது சரி, நாடகம் எப்படி இருந்தது?'' என்று ஆவலுடன் கேட்டான் வேணு.

''மேனாட்டு வாழ்க்கை முறை, சூழ்நிலை ஆகியவற்றை வைத்து எழுதப்பட்டது என்பதை மறவாமல் இருந்தால் நாடகத்தைப் பிரமாதம் என்று சொல்லத் தோன்றும். இப்ஸனின் நோரா என்ற பாத்திரத்தைத் ''தாரா'' என்று மாற்றியிருக்கிறார், நாடகத்தை மொழிபெயர்த்துத் தயாரித்த கோபாலி. பாத்திரத்தை ஏற்று நடித்த எழிலரசி இறம்பட நுட்பமான உணர்ச்சிகளைப் புலப்படுத்தி நடித்தார்!'' என்றாள் ஹேமா.

''மேனாட்டு ஆண் நடிகர்களுக்குத் தங்கள் வாழ்க்கை லட்சியம் ஷேக்ஸ்பியர் எழுதிய ''ஹாம்லெட்'' பாத்திரத்தை ஏற்று நடித்துப் பெயர் வாங்குவது; அதேபோல் பெண் நடிகைகளுக்கு நோரா பாத்திரத்தை ஏற்று நடித்துப் பெயர் எடுப்பது இலட்சியமாம். அக்கல்லூரி பிரின்ஸிபால் திரு ராஜாராமதாஸ் தெரிவித்தார்!'' என்றாள் சாரு.

''சரி, கதை என்னடீ!'' என்று கேட்டாள் அத்தை!

''புருஷர்கள் தங்கள் மனைவிமார்களை ஏதோ விளையாட்டுப் பொம்மை மாதிரி நடத்துகிறார்களே தவிர கணவனுடைய வாழ்க்கையில் ஏற்படக்கூடிய கஷ்ட சுகங்களைப் பகிர்ந்து கொண்டு உதவக்கூடியவளாக மனைவியை யாரும் கருதுவதில்லை. புருஷனுடைய இன்ப நுகர்ச்சிக்குரியவள் அவள் அவ்வளவுதான். இந்தக் கருத்து அநீதி என்று நாடகம் வற்புறுத்துகிறது!'' என்றாள் சாரு.

''அத்தை! உன்னை அத்திம்பேர் பொம்மையாகவா நடத்தினார்?'' என்று குறும்புத்தனமாகக் கேட்டான் சுந்தர்.

''சே! அத்திம்பேர் என்னைக் கேட்காமல் துரும்பு கூட அப்படி எடுத்து வைக்கமாட்டார்!'' என்றாள் அன்னபூர்ணம்மாள்.

''அப்பா மட்டும் என்னவாம்? அம்மாவைக் கேட்காமல் ஒரு காரியம் பண்ணுகிறாரா என்ன?'' என்றான் வேணு.



மைவிழி மகளிர்

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 : : தந்தி: "GROWRICH"

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட
**1974 மே மாத புதிய குருப்புகள்**

**குறுகிய காலம்**
25 மாதங்கள்-25 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 12-5-74

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| B | 100/- | 2,500/- |
| C | 50/- | 1,250/- |
| F | 25/- | 625/- |

**நீண்ட காலம்**
40 மாதங்கள்-40 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 26-5-74

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTE | 500/- | 20,000/- |
| LTF | 250/- | 10,000/- |
| LTG | 125/- | 5,000/- |
| முதல் ஏலத் தேதி 19-5-74 | | |
| LTM | 50/- | 2,000/- |

நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை
வார விடுமுறை: திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600005
தபால் பெட்டி 414
கிளைகள்: பெங்களூர் — கல்கத்தா — புது டெல்லி — கோயம்புத்தூர்
இலவசப் பிரகடனத்திற்கு எழுதுங்கள்
சிட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின்
உரிமையைப் பொறுத்தது




எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# அசானக்

**புளித்துப் போன ஃபார்முலாவில் பத்துப் படங்கள் வரும்போது 'திடும்'மென்று 'அசானக்' போன்ற ஒரு படமும் வாய்க்கிறது ரசிகர்களுக்கு!**

'அசானக்' என்ற சொல்லுக்கு 'திடு மென்று' என்பதுதான் பொருள்.

இப்படித் திடுமென்று சிறந்ததொரு சித்திரத்தை உருவாக்கிய பெருமை யாரைச் சேர்ந்தது? இந்தக் கேள்விக்குத் திடுமென்று பதில் கூறிவிட முடியாது. ஏனெனில் இப் படம் இப்படி உருவாவதற்குப் பொறுப்பான எல்லோருமே 'நான் முந்தி, நீ முந்தி' என்று முன்வந்து நிற்பர். கதைக்குப் பொறுப்பான திரு கே. ஏ. அப்பாஸ், படம் இத்தனை சிறப் பாக உருவாவதற்குப் பொறுப்பான ரிஷி கேஷ் முக்கர்ஜி, இந்தச் சிறப்புக்குச் சிறப் பூட்டும் வகையிலே திரைக் கதை, வசனம் புனைந்து இயக்குநச் சிறப்பைக் காட்டிய குல்ஜார், காமிராவின் கலை வண்ணத்தைக் கருத்து மிகு விருந்தாகப் படைத்த ஸ்ரீ வைகுண்ட் ... இப்படிச் சொல்லிக் கொண்டு போனால் விநோத் கன்னா, ஓம் சிவ புரி, லிலி சக்கரவர்த்தி, ஃபரீதா ஜலால், இஃப்தெகார், அஸ்ரானி ஆகியவர்களும் ஒரு வருக்குப் பின் ஒருவராகத் தோன்றுவார்கள்.

ஆப்பரேஷனில் தொடங்குகிற கதை ஆப்ப ரேஷனில் முடிகிறது. ரஞ்சித் கன்னா என்ற மேஜர் குண்டுக் காயம் பட்டு உயிர் ஊச லாட ஆப்பரேஷன் தியேட்டருக்குக் கொண்டு வரப்படுகிறார். ஆப்பரேஷன் செய்தாலும் அவர் உயிர் பிழைப்பார் என்ற நம்பிக்கை டாக்டருக்கு இல்லை. நினைவு தவறிய நிலையில் பழைய நினைவுகள் கலை நுணுக்கத்துடன் 'ஃப்ளாஷ் பாக்' உத்தியில் அலைலைக் கிளறும் வண்ணம் படமாக்கப்பட்டுள்ளன.

மேஜர் கன்னாவுக்குத் தம் மனைவியிடம் உயிர். அத்தகைய ஆசை மனைவி மோசம் செய்து விட்டாள் என்று தெரிந்த வேளையிலே, ஒற்றைக்கு இரட்டையாகக் கொலை நடை பெறுகிறது. பலன், தூக்குத் தண்டனை பெறுகிறார் மேஜர் கன்னா. மோசம் செய்த மனைவியானாலும் அவளது ஆசை நினைவு வரு கிறது. 'நான் இறந்து விட்டால் என் தாலிச் சரட்டைக் கங்கையில் போடுங்கள்!' என்று அவள் கூறியதை நிறைவேற்றச் சிறையி லிருந்து தப்புகிறார். அவர் தப்பி ஓடினாலும் காமிரா அவரைத் தப்ப விடவில்லை. பலன் விநோத் கன்னாவின் நடிப்புப் பளிச்சிடுகிறது. காமிரா அதற்கு மெருகிடுகிறது.

குண்டடி பட்டு வந்தவனுக்கு அறுவைச் சிகிச்சை செய்து பிழைக்க வைத்தாலும் சட்டம் அவன் செய்த குற்றத்துக்குத் தூக்குத் தண்டனை பெற அவனை அழைத்துப் போகிறது. சர்ஜனாக வரும் ஓம் சிவபுரி மரணப் பிடியிலிருந்து தம்மால் மீட்கப் பட்டவன் மரணத்தைத் தழுவச் செல் வதைப் பார்த்துவிட்டு மனம் பதைக்கிறார். கர்னலாக வரும் இஃப்தெகாரோ, கடுமைக் கும், மென்மைக்கும் பாலம் அமைத்துத் தம் நடிப்புக்கு மேன்மை சேர்த்துக்கொள்கிறார்.

நர்சாக வரும் ஃபரீதா ஜலால் தம் உதட்டு நகைப்பால் உள்ளத்துக் காதலுக்கு ஓர் உரு வம் கொடுத்து மயக்குகிறார்.

லிலி சக்கரவர்த்தியும் அஸ்ரானியும் தாம் ஏற்ற பாத்திரத்துக்கு அடங்கிக் கச்சிதமாக நடித்து நியாயம் வழங்கி யிருக்கின்றனர்.

குல்ஜாரை இப்படி ஒரு நல்ல படம் எடுக்கத் தூண்டிய பெருமை 'டெத் கால்ட், ஏஞ்ஜெல் கேம்' என்ற செக் படத்துக்கு உண்டு என்று லும், இப்படி ஒரு சில நல்ல படங்களாவது வந்து கொண்டிருந்தால்தான் திரையுலகம் விழிப்புறும். 'அசானக்' திரையுலகைத் தட்டி எழுப்ப முயலுகிறது. — ரா. வீ.





கதையைத் தொடங்குகிறேன். இதுஎன் கதை. ஆம், என் சொந்தக் கதை. நான் சாகப் போகிறேன்... அதற்குள் என் கதையை நான் சொல்லி முடித்துவிட வேண்டும்.

இந்த ஊரின் பெரிய மனிதன் நான். என்னை அனைவருமாகச் சேர்ந்து பெரிய மனிதன் ஆக்கி விட்டிருக்கிறார்கள். என்னை நல்லவன் என்றும், ரசனைகள் மிகுந்த கலைஞன் என்றும், அவர்கள் பட்டங்களைச் சூட்டி என்னை அறியாமலேயே அந்தப் பட்டத்தைத் தாங்க என்னைத் தயார்ப்படுத்தி விட்டார்கள்.

ஆம். இப்போது கூட நான் ஒரு நாடகத்துக்குத்தான் தலைமை தாங்க வந்திருக்கிறேன். இது என் கடைசி நிகழ்ச்சி. ஏற்கனவே ஒப்புக்கொண்டு விட்ட நிகழ்ச்சி .... இந்த நிகழ்ச்சி முடிந்ததும் நான் சாகப் போகிறேன்.

சாகப் போகிற அந்த நேரத்தை நினைத்துப் பார்க்கிறேன். கார் நிறையப் பெட்ரோல் போட்டுக் கொண்டிருக்கிறேன். கூட டிரைவரையும் அழைத்து வரவில்லை ... மனம் போன போக்கில் என் விருப்பம்போல் காரை ஓட்டிக் கொண்டு போகப் போகிறேன் ... பெட்ரோல் தீரும் வரை ... அதன் பின் ... அதன் பின் ... ஏதாவது மலைச்சரிவு, பள்ளத்தாக்கு இல்லாமலா போய் விடப் போகிறது? ஆ ... என்ன சொன்னேன். என் கதை ... இதோ சொல்கிறேன் ... அடேடே ... மணி அடித்து விட்டார்களே ... நாடகம் ஆரம்பமாகப் போகிறது .. சற்றுப் பொறுங்கள்...

“ரமணா...! டேய் என் கண்ணுலே தூசி விழுந்துட்டதடா ... கொஞ்சம் ஊதி விடேன்...''

''ஏண்டி ராஜீ ... கண் இப்படிச் சிவந்து கிடக்கு ... இப்படியே ஏண்டி பள்ளிக்கூடம் வந்தே? லீவு போட்டுட்டு வீட்டுக்குப் போடி ...இப்படிப் பார் ... அடேடே ... கண் என்னமா சிவந்திருக்கு .. இப்படிப் பாருடி ....ஸ்.... இந்த மாதிரி அழுதா எனக்குப் பிடிக்காதுன்னு தெரியுமில்லே...?''

''இல்லேடா ரமணா... உன்னோட அன்பை நினைச்சா என்னமோ மனசுக்குக் கஷ்டமாயிருக்குடா ... எனக்குச் சொல்லத் தெரியல்லே...''

''ராஜீ!.. நாம ரெண்டு பேரும் அனாதை. நீ உன் சித்தி கிட்ட கொடுமைப்படறே ... நான் என் மாமிகிட்டே .... அவ்வளவுதான் வித்தியாசம்.. சே. இப்படி அழாதே ராஜீ. நீ அழுதால் எனக்கும் கஷ்டமா யிருக்கு. உனக்கு என்ன கஷ்டம் வந்தாலும் எங்கிட்டே சொல்லு ... என்ன?''

''ரமணா!... உன் கையை இப்படிக் காண்பியேன் ... டேய் என்னடா இது கையெல்லாம் ஒரேயடியா இப்படிச் சிவந்திருக்கு? ஐய்யய்யோ ... என்னடா பண்ணினே?''

''உஸ்... சத்தம் போடாதே. மாமி கிணத்துலேயிருந்து தண்ணீர் இறைக்கச் சொன்னாள்... தொட்டி நிறைய வேண்டாமா? என் கையிலே பலம் இல்லே ... நூறு பக்கட் கூட இறைக்க முடியல்லே ... ச்சீ ... அசடு ... இதுக்குப் போய் ஏன் அழறே?''

''ரமணா என்னை வீட்டிலே இருக்கச் சொன்னியே ... இந்த ரணமான கையோட நீ ஏன் பள்ளிக்கூடம் வந்தே? எப்படி கிளாஸிலே எழுதப் போறே? உன் 'ஹோம் ஒர்க்கை' எங்கிட்டே கொடு, எல்லாம் நான் செஞ்சு தரேன். என்ன? ஏய் ... அசடு ... அசடு ... என்னை அழக் கூடாதுன்னு சொல்விட்டு நீயே அழறியே?''

''டாண் ... டாண் ... டாண்...''

முதல் காட்சி முடிந்ததும் என் அருகில் அமர்ந்திருந்த ஒருவர் தம் கண்களைத் துடைத்துக் கொண்டதைப் பார்த்தேன். நானும் ஏதோ தூசியை எடுப்பவனைப் போல் பாவனை செய்து கண்களைத் துடைத்தேன்.

“ராஜீ ... ராஜீ...''

''ரமணன், நீயா? இல்லே, நீங்களா !''

''ராஜீ சிறு வயதில் என்னைக் கூப்பிட்ட மாதிரி நீ என்றே கூப்பிடு .. ராஜீ ... நீ



பள்ளிக்கூடத்திலிருந்து நின்ற பிறகு எனக்குப் படிக்கவே பிடிக்கவில்லை தெரியுமா? உன்னை எப்போது பார்ப்போம் எப்போது உன்னுடன் பேசுவோம் என்று காத்திருந்தேன்! ராஜி, நிஜமாகச் சொல். இத்தனை நாட்கள் என்னைப் பார்க்காமல் உன்னால் எப்படி இருக்க முடிந்தது? ஒரு நாள் கூட எனக்கு உன் நினைவு வராமல் போனது கிடையாது .. நீ மட்டும் எப்படி...?''

''ரமணா, பெண்கள் ஆண்கள் மாதிரி இல்லை. அவர்கள் சமூகத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். என்னைப் பள்ளிக் கூடத்திற்குப் போகாதே என்று பெரியவர்கள் சொன்னால் நான் எப்படி மறுக்க முடியும்? கொஞ்ச நாட்கள் கஷ்டமாக இருந்தது .. அப்புறம் பழகி விட்டது. அவ்வளவுதான்...''

''ராஜி ... உன் பேச்சைக் கேட்கத் தயாராக இல்லை. அதை நான் ஒப்புக் கொள்ளவும் தயாராக இல்லை. பழக்கம் வேறு. கட்டுப்பாடு வேறு. ஆனால், உண்மையாகச் சொல். உணர்வுகள் வேறுதானே ...? அந்த உணர்வுகளை அடக்கிப் பழகிக் கொண்டது எப்படி என்றுதான் கேட்கிறேன்?''

''ரமணன்! காட்டில் மலர்ந்திருக்கும் பூக்களைப் பார்த்திருப்பீர்கள். எவ்வளவு செழிப்புடன் மலர்ந்திருக்கின்றன. அவைகளுக்கு யார் தண்ணீர் ஊற்றினார்கள்? ஆனால் இதைப் பார்த்து விட்டு வீட்டு ரோஜாச் செடிக்குத் தண்ணீர் ஊற்றாமல் விட்டு விட்டால் கண்டிப்பாய் வீட்டு ரோஜா வாடிப் போகும். நான் காட்டுச் செடி ... என்னால் தண்ணீரின்றிக்கூட வளர முடியும் ... ஆனால் நீங்கள் அப்படி அல்ல... அதனால் தான் கவலைப் படுகிறீர்கள் என்னைப் பற்றி.''

''ராஜி! நீ காட்டுச் செடியாக இருந்தால் கவலைப்பட மாட்டேன், ஆனால் காட்டு நிலவாக இருக்கிறாயே என்றுதான் வேதனைப் படுகிறேன், ராஜி... நான் மேற்படிப்புக்



# வாழ்க்கை தொடருகிறது...

விமலா ரமணி





## எறும்பால் முடியும்; மனிதனால் முடியுமா?



"ஒரு எறும்பு போல் சுறுசுறுப்பாக இருக்க வேண்டும்" என்று கூறுவதுண்டு. எறும்பினுடைய அளவுடன் மனிதனுடைய உருவத்தை ஒப்பிடும்போது அந்த விகிதாசாரப்படி அவன் செய்ய வேண்டிய வேலையின் அளவு: ஒரு நாளில் 300 பவுண்டு எடையைச் சுமந்து கொண்டு 3000 மைல் நடக்க வேண்டும். அது மட்டுமா? நியூயார்க்கிலுள்ள 'எம்பயர் ஸ்டேட் பில்டிங்'கைப் போல் 12 மடங்கு உயரமுள்ள ஒரு கட்டிடத்தையும் கட்டி முடிக்க வேண்டும்!

ஆதாரம்: "டெக்கன் ஹெரால்ட்"
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

---

காகப் பட்டணம் போகிறேன். நாலைந்து வருடங்களில் திரும்பி விடுவேன். அதன் பின்..."

"என் சக்திக்கு உட்பட்டவரை நான் போராடி உங்களுக்காகக் காத்திருப்பேன். ஆனால், ஆனால் காலம் நமக்காகக் காத்திருக்காது..."

"இது போதும் ராஜி... இந்த உறுதி மொழி போதும். நான் வருகிறேன். எங்கே உன் கைகளை இப்படி ஜன்னலுக்கு வெளியே நீட்டு. ராஜி. இதென்ன? உன் கையில் இத்தனை கொப்புளங்கள்? என்ன செய்தாய்?"

"இரண்டுபடி அரிசி இட்டிலிக்குஅரைப்பது பெரிய காரியமில்லைதான். ஆனால் கையில் வரவரப் பலம் குறைந்து விட்டது. அட... இதற்குப் போய் ஏன் அழுகிறீர்கள்? ரமணன் நீங்கள் ஒரு கோழை!"

"ராஜி! இந்த மலர்க் கரங்களை நான் பிடிக்க வேண்டும் ... இதன் நோவுகளை நான் தொட்டுத் தொட்டுத் தீர்க்க வேண்டும். அப்போது என் வீரத்தை நீ மெச்சுவாய்."

இடைவேளை. பளீரென்று விளக்குகள் எரிந்தன. என் கண்கள் கூசின. தாகம் தொண்டையை வறட்டியது. தலைமை தாங்குகிறவன் ஆயிற்றே. என்னைத் தேடி 'கூல்டிரிங்' வந்தது. குடித்து வைத்தேன். ஏனோ தாகம் அடங்கவேயில்லை.

"ரிஸப்ஷன் தடபுடல் படுகிறதே... ரமணனோட மாமா மருமானுக்கு ஒரு குறையும் வைக்கவில்லை ... நல்லபடியாகக் கல்யாணமும் பண்ணி வைத்து விட்டார். ஏதோ ரமணன் அந்தக் காலத்தில் மாமியிடம் கொஞ்சம் கொடுமைப் பட்டான் வாஸ்தவம். இப்போது பாருங்கள். நல்ல வேலை. கை நிறையச் சம்பளம். சமூகத்தில் நல்ல அந்தஸ்து. கொடுத்து வைத்தவன். இப்போது கொடுமைப்படுத்த மாமியும் இல்லை. போய் விட்டாள் மகராசி..."

"ஆமாம் பெண் யார்?"

"பெண் தானே ... அதான் ஸார்... அடேடே ... வாருங்கள் வாருங்கள். 'எக்ஸ்க்யூஸ்மீ' ... ஒன் மினிட் இவரை டிபனுக்கு உட்கார வைத்து விட்டு வந்து விடுகிறேன். இப்படி வாருங்கள், ஸார்! இப்படி...?"

காட்சி மாறுகிறது:

"என்னடா மாப்பிள்ளை! படுக்கை அறைக்குப் போகாமல் இங்கேயே சுற்றிக் கொண்டிருக்கிறாய்? போடா உள்ளே. பெண்டாட்டி காத்துக் கொண்டிருக்கிறாள். போய் விடு. அப்புறம் அவள் கோபித்துக் கொண்டு விட்டால் உன்னால் தாங்க முடியாது."

"இதோ பார். என்னைப் பார்.. அந்த மூலையில் போய் உட்கார்ந்து கொண்டால் என்ன அர்த்தம்? சீச்சீ...அழுகிறாயா என்ன?"

"என்னை நீங்கள் விருப்பமில்லாமல் தானே கல்யாணம் செய்து கொண்டீர்கள்?"

"யார் சொன்னது அப்படி?"

"ஏன் எல்லோரும் சொல்லுகிறார்கள்! அம்மா சாகும் போது சத்தியம் வாங்கிக் கொண்டதால்தானே என்னைக் கல்யாணம் கடனுக்காகச் செய்து கொண்டீர்கள். இல்லாவிட்டால் ராஜியைத்தானே கல்யாணம் செய்து கொண்டிருப்பீர்கள்..."

"ஆமாம் ... அவள் என் பள்ளித் தோழி. ஒரே வகுப்பில் படித்தோம்."

"அவளுக்கு 'ஹோம் ஒர்க்' எல்லாம் போட்டுத் தருவீர்களாமே..."

"ஆமாம் ... அவள் சித்தியிடம் கொடுமைப்பட்டாள், நான் மாமியிடம் வந்து..."

"பரவாயில்லை சொல்லுங்கள். அம்மாவை வேறு யார் இத்தனை உரிமையுடன் திட்டப் போகிறார்கள்? உங்கள் பேச்சிலிருந்தே தெரிகிறதே..."

"கமலி .. இன்று நீ என்னைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறாய். நாம் சண்டை பிடித்துக் கொள்வதற்காக இந்த அறைக்கு வரவில்லை..."

"விருப்ப மில்லாதவர்களுடன் என்ன வாழ்வு வேண்டி யிருக்கிறது?"

"கமலி..."

"சத்துங்கள் ... சண்டை போடுங்கள். அதற்காகத்தானே கல்யாணம் பண்ணிக் கொண்டீர்கள். என் அம்மாவைப் பழி வாங்க என்னை பலி வாங்குகிறீர்கள்..."

"இல்லை கமலி. உன் அம்மா உன் மூலமாக என்னைப் பலி வாங்கி விட்டாள். உம்... இப்போது என்ன நடந்து விட்டது? ஏன் இப்படி அழுது ஆர்ப்பாட்டம் செய்கிறாய்?"

"ஆமாம். நான் ஆர்ப்பாட்டக்காரிதான்! அரைச் சமர்த்துதான்... அன்றே தெரியும் இல்லையா?"

"தெரியாது. உன் சமர்த்து எங்களுக்குத் தெரியக் கூடாது என்றுதானே உன்னைப் பாட்டி ஊருக்கு அனுப்பி உன் அம்மா படிக்க வைத்தாள்?"

"பார்த்தீர்களா .... உங்கள் வக்கிர புத்தியை..."

"வக்கிரம் இங்கில்லை கமலி. அங்கேதான். நன்றிக்காக என் உணர்வுகளை மதிக்காமல் உன்னை மணந்து கொண்டேன் பார். எனக்கு இந்தத் தண்டனை வேண்டியதுதான். நான் உன்னை மணக்க வேண்டும் என்பதற்காக, உனக்காகத் தன் வாழ்வையும் நரகமாக்கிக் கொண்டு, ஊரை விட்டே ஒழிந்துபோனாளே ராஜி .. அவள் தியாகத்துக்கு இதைவிடச் சிறந்த பரிசு வேறு இருக்க முடியாது..."

"படார்..." விம்மல் ஒலி.

மேடையில் மெல்ல மெல்ல விளக்கு அணைந்து கொண்டு வந்தது. கூட்டத்தில்

குழந்தை ஒன்று சிணுசிணுத்தது. பெற்றோர்கள் நாடகம் பார்க்கும் ஆசையில் குழந்தையை அடக்குவது கேட்கிறது...

குழந்தையின் சப்தம்...

"இந்தக் குழந்தை ஏன் இப்படிக் கத்துகிறது? என்ன கம்ப்ளெண்ட்?"

"ராத்திரி முழுதும் தூக்கம் இல்லை டாக்டர்... இப்படித்தான் ஒரு மாதமாகக் கத்திக்கொண்டு ... டாக்டர் ... ரமணன்... நீ... நீங்களா?"

"ராஜி.... நீயா? இதென்ன விதவைக் கோலம் ராஜி? உன் கணவர் என்னவானார்?"

"டாக்டர், முதலில் குழந்தையைக் கவனியுங்கள்... என் கணவரின் குழந்தை..."

"ஐயாம் சாரி. நர்ஸ்.. குழந்தையை 'ரூமுக்கு' எடுத்துக் கொண்டு போ...சரியாகி விடுவான் ராஜி! கவலைப்படாதே! நாலு நாட்கள் இந்த மருந்தைக் கொடுக்க வேண்டும்....இப்போது சொல் ராஜி...இந்தக் குழந்தை...."

"சொல்கிறேன்... டாக்டர்... நான் இரு மணமானவள்.... அதுவும் விதவை..."

"ராஜி .. காட்சியின் சாட்சியாய் நீயே கழுத்து மூளியாய் நிற்கும் போது அதை அடிக்கடி ஏக்கத்தோடு கூற வேண்டுமா? எனக்காகக் காத்திருப்பதாகச் சொன்னாயே... மறந்து விட்டாயா?"

"ஆமாம், டாக்டர், காத்திருப்பதாகச் சொன்னேன் ... ஆனால் கமலி காத்திருப்பது தெரியாது."

"அந்த அரைப் பைத்தியத்தையும் என்னையும் எப்படி இணைத்துப் பார்க்க முடிந்தது உன்னால்?"

"டாக்டர்! மூன்றும் தாரமாக ஒருவனுக்குச் செவிலித் தாயாக என்னைப் பலியிட என் சித்தி முன் வந்த போது அதையும் என்னால் எதிர்க்க முடியவில்லையே! ஆனால் உங்கள் கதை அப்படியல்ல ... அழகில்லா அசடானாலும், அவளால் அந்தஸ்து கிடைத்திருக்கிறதே ... இதற்காகவாவது நான் இந்தத் தியாகம் செய்யக் கூடாதா? என்னால் உங்களுக்குக் கண்டிப்பாகப் பலன் இராது. என்னால் என் சித்திக்காவது பலன் கிடைக்கட்டுமே – என்று நான் நினைத்து..."

"ராஜி! பைத்தியத்துடன் வாழ முடியாமல் என் வாழ்வை நாசமாக்கிக் கொள்ள நினைத்தேன். ஆனால் என்னால் முடியவில்லை. அல்லும், பகலும் படிப்பிலும் டிஸ்பென்சரியிலும் பொழுதைக் கழித்தேன்..."

"அது மற்றவர்களுக்குப் பயனுள்ளதாக மலர்ந்திருக்கிறது பார்த்தீர்களா? ஒன்றின் மறைவு மற்றதின் விளைவுக்கு வித்தாகிறது. மலர் உதிர்ந்தால்தான் காய் கனியாகும்"

"நீ எப்படி மாறி விட்டாய் ராஜி. அதே பழைய ராஜிதானா நீ? கபடமற்ற சிரிப்பு, துள்ளித் திரியும் உன் துடிப்பு எல்லாம் எங்கே? நீ எப்படி மாறி விட்டாய்?"

"நீங்கள் மட்டும் என்னவாம் டாக்டர்... நிறையத்தான் மாறி விட்டீர்கள் .. முன்பெல்லாம் அவசரமாகப் பேசுவீர்கள் ... இப்போது இந்த நிதானம் எங்கிருந்து வந்தது? அடிக்கடி ஏன் இப்படிச் சோக வயப்படுகிறீர்கள்? மனம் விட்டுச் சிரியுங்கள்."

இன்னும் இரண்டு காட்சிகள்தான் இருக்கின்றனவாம். மேடையில் இப்போது பேசுகிறீர்களா? – என்று என்னைக் கேட்கிறார்கள். நான் நாடகத்துடன் ஒன்றியிருந்தேன். இந்த லயிப்பைத் துறந்து விட்டு நான் 'நடிக்க' முடியாது. நாடகம் முடிந்ததும் பேசுவதாகச் சொல்லி விட்டேன்.

"ராஜி!...இந்த உடம்புடன் ஏன் வீட்டு வேலைகளைச் செய்கிறாய்? என் 'டிஸ்பென்சரி'யில் வந்து படுத்துக் கொள் என்று சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறாய்..."

"டாக்டர் ... நீங்கள் இந்த விதவைக்கு வைத்தியம் செய்ய என் வீட்டுக்கு வருவதே எனக்குப் பிடிக்கவில்லை... என் காரணமாக உங்கள் மனைவிக்கும் உங்களுக்கும் அடிக்கடி சண்டை வருகிறதாமே? உண்மையா டாக்டர்?"

"ஆம். உண்மையை ஒப்புக்கொள்கிறேன், எனக்கும், என் மனைவிக்கும் அடிக்கடி சண்டை வருவது புதிதல்ல... என்று அவள் கழுத்தில் மஞ்சள் கயிற்றைக் கட்டினேனோ அன்றே என் அமைதியற்ற வாழ்வுக்கு ஆண்டவன் அஸ்திவாரம் போட்டு விட்டான். தினம் தினம் நான் செத்துக் கொண்டிருக்கிறேன் ..."

"டாக்டர்...! நீங்கள்...நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்? அன்று கோழையாகி வாழ்வின் வசதிகளைத் தேட, பிறரின் லாபத்தில் பங்கு கொள்ள நினைக்கும் வட்டிக்காரனாக, வியாபாரியாகிப் பட்டணம் போனீர்கள். உங்களுக்கு லாபம் கிடைத்த போது முதலே மூழ்கிப் போய்விட்டது. டாக்டர், அன்றே, 'ராஜி, என்னுடன் வந்துவிடு, நாம் இருவரும் எங்காவது போய் வாழ்ந்து கொள்ளலாம்' – என்று சொல்ல உங்களுக்குத் துணிவு ஏற்படவில்லை. அப்படி அன்று நீங்கள் சொல்லி இருந்தாலும், நான், வந்திருப்பேனா என்பது வேறு விஷயம் .. நீங்கள் அப்படிச் சொல்ல மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும் ... காரணம் நீங்கள் கோழை! ஊருக்குப் பயந்து கொண்டு வாழ்ந்தே உங்களுக்கு வழக்கமாகி விட்டது. அதே காலத்தில் வீட்டில் மாமாவுக்கும், மாமிக்கும் பயந்தீர்கள். பிறகு மனைவிக்கும் இப்போது ஊருக்கும் பயப்படுகிறீர்கள். அதே நேரத்தில் ஏன் போலி வீரம் காட்டுகிறீர்கள்?"

"உன்னை, உளமார நேசிப்பதைப் போலி வீரம் என்றா ராஜி, சொல்கிறாய்?

**பழைய கதை!**
**இன்றைய நிலை?**

நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை 3-12-61 அன்று 678 பக்கங்களில் ஞாயிறு மலர் வெளியிட்டது. அதன் எடை 6 பவுண்ட். சுமார் 15 லட்சம் பிரதிகள் அச்சாவதற்குத் தேவைப்பட்ட காகிதம் 4500 டன். இந்தப் பேப்பருக்குத் தேவைப்பட்ட மரங்களின் எண்ணிக்கை 77 ஆயிரம். இந்த மரங்கள் வெட்டப்பட்டதால் காலியான காட்டுப் பகுதியின் பரப்பு 360 ஏக்கர்.

ஹிந்துஸ்தான் டைம்ஸ் - பாலி

## நடமாடித் திரிந்து...



இரண்டு நண்பர்கள் தெருவில் சந்தித்தார்கள், பல நாட்களுக்குப் பிறகு! ஒருவர் ஊன்றுகோலை உபயோகப்படுத்துவதைக் கண்டு அடுத்தவர் ஆச்சரியப் பட்டார்! ''உனக்கு என்ன நேர்ந்துவிட்டது?''

''கார் விபத்து!''

''எப்போ நடந்தது?''

''ஆறு வாரங்களுக்கு முன்பு!''

''இன்னமும் ஊன்றுகோலைப் பயன்படுத்த வேண்டியிருக்கிறதா?''

''டாக்டர் சொல்கிறார், இல்லாமலே நடக்கலாமென்று! ஆனால் வக்கீல் கூறுகிறார்: இது இல்லாமல் நடக்கக் கூடாதென்று! என்ன செய்வது?''

ஆதாரம்: ''லிமெக்ஸ்'' பி.எஸ்.எம்.

## பயங்கர விமர்சனம்!

'பயங்கரமான இரவு' நாடகத்தைப் பற்றி லண்டன் பத்திரிகை விமர்சகர் ஒருவர் ஒரே வார்த்தையில் விமர்சனம் எழுதினார்: ''அதேதான்!''

- மிர்ரர் - பாமாப்பிரியா

---

ஐயோ ராஜி, என்னைக் கொல்லாமல் கொல்கிறாய்!''

''நீங்கள் இரண்டு பேருமாகச் சேர்ந்து தான் என்னைக் கொல்கிறீர்கள்!''

''கமலி! நீயா!''

''ஏன் வரக் கூடாதா? மானம் போகிறது. ராஜியாம், ராஜி. அன்று சொன்ன போது ஒரேயடியாய் மறுத்தீர்களே! இப்போது எப்படி? சாகஸக்காரி, இவள் மனுஷியா? மாயாஜாலக்காரி...''

''கமலி! ஜடமே! என்ன பேசுகிறோம் என் பதே புரியாமல் என்ன பிதற்றுகிறாய்?''

''டாக்டர்! என்ன பார்த்துக் கொண்டு நிற்கிறீர்கள்? கமலி மயங்கி விழுந்து விட் டாள். சீக்கிரம் அவளுக்கு வைத்தியம் பாருங்கள் டாக்டர்...''

''வேண்டாம் ராஜி. கொஞ்ச நேரத்தில் அவள் சரியாகி விடுவாள். இது 'ஹிஸ்டீரியா!' நான் அழகான பெண் யாருடனாவது பேசினால் அவளால் தாங்க முடிவதில்லை.''

''டாக்டர். இந்த 'ஹிஸ்டீரியா' வியாதி கமலியை மட்டும் பிடித்திருக்கவில்லை டாக் டர். இந்தச் சமூகத்தையே பிடித்திருக்கிறது. இன்று கமலி கூறிய சொற்கள் சமூகத்தின் ஏகோபித்த குரல்!''

''இவளோடு நான் வாழ வேண்டும் என்கிறாயா?''

''இல்லை ... இவளுக்கு ஒரு டாக்டர் என்ற முறையில் சிகிச்சை தர வேண்டும், கணவன் என்ற முறையில் பாதுகாப்புத் தர வேண்டும். இதை வாழ்வாக ஏற்றாலும் சரி; தண்டனையாகப் பாவித்துக் கொண்டாலும் சரி..''

''ராஜி... உன் கதி?''

''என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். உங்கள் நோயாளிகள் உங்களுக்காகக் காத் திருக்கின்றனர். என் குழந்தை எனக்கு இருக் கிறான்.''

''அம்மா... அம்மா... உன் உடம்பு இப் போது தேவலையா அம்மா? இது யார் இந்த மாமி? தூங்குகிறார்களா?''

''வாடா, ராஜா! பள்ளிக்கூடத்திலிருந்து வந்துவிட்டாயா? இதுவா? ஆம் டாக்டர் மாமி.... தூங்கட்டும் கொஞ்சம் நிம்மதி யாய்.... ராஜா, நாளைக்கு நாம் வேறு ஊருக்குப் போகிறோம்.''

''ராஜி! என்ன இது திடீரென்று?''

''டாக்டர்! இதுவரை நீங்கள் எனக்குப் பார்த்த வைத்தியத்துக்கு மிக்க நன்றி. இனி உங்கள் வைத்தியம் உங்கள் மனைவிக்குத் தான்...''

''ராஜி! வைரத்தைக்கூடப் பொடித்துவிட லாம். ஆனால் நீ பொடிக்கப்பட முடியாத வைரம். விலைமதிப்பற்ற வைரம்.''

''போய் வாருங்கள், டாக்டர். வைரத் தின் விலை, அதன் மதிப்பை உணர்ந்த வைர வியாபாரிக்குத்தான் தெரிகிறது. நீங்கள் இப்போதுதான் உண்மையிலேயே ஒரு வியா பாரி, நல்ல வைர வியாபாரி.... உங்கள் அன்புக்கு நன்றி டாக்டர்.''

**நா**டகம் முடிந்து விட்டது. என்னை மேடைக்கு அழைத்தனர். நான் தடுமாறிய படியே மேடைக்கு விரைந்தேன்.

பேச நா எழவில்லை. உணர்ச்சி மயமான நாடகத்தின் முடிவில் என் பேச்சு எப்படி எடுபடும் என்ற பயம். அதோ....அதோ... தூரத்தில் அவசரமாக வருவது....? என் வீட்டு வேலைக்காரன்... அவன் என்ன சங்கதி கொண்டு வருவான் என்பது எனக்குத் தெரி யும். கார் நிறையப் பெட்ரோல்...?

அவசரமாகப் பேச்சை முடித்த நான் காரில் ஏறி அமர்ந்தேன். வேலைக்காரனும் உடன் காரில் ஏறிக் கொண்டான்.

என் மனைவிக்கு ஹிஸ்டீரியா அதிகமாகி விட்டது. மயங்கி விழுந்து விட்டாள். டாக்டர் வந்திருக்கிறார். அதுதான் சங்கதி. நான் மேடைப் பிரசங்கி. யார் யார் எப்படி நடந்து கொள்ள வேண்டும், எப்படி இருக்க வேண்டும் என்பதை அழகாகக் கூறுவேன். திட்டமிட்டு நடந்து கொள்வதைப் பற்றி நான் கணக்கில் சுவையாகச் சொல்லுவேன். நான் பெரிய மனிதன், கலைஞன், பணக்காரன், என்னைச் சுற்றி ஒரு கூட்டமே காத்திருக் கிறது...ஆனால் வீட்டில்...?

ஆரம்பத்தில் என் கதையைச் சொல் வதாகத்தானே சொன்னேன்? அதற்கு இப்போது அவசரமில்லை. ஏனெனில்?

நான் வீடு திரும்பிக் கொண்டிருக்கிறேன்.

ஒரு நாடகம் முடிந்து விட்டது. ஒரு வாழ்க்கை தொடர்ந்து கொண்டிருக்கிறது.



"ட்ரு-டோன்" சமமாகவும் சீராகவும் பரவும்"
திருமதி வின்னி சங்
ட்ரூ ஹெவன், கல்கத்தா.

"ட்ரு-டோன்" பாதுகாப்பானது, எளிதாக உபயோகிக்கலாம்"
ஜென்னி லீ
விஸ்லா-பெட் ப்யூட்டி சலூன், ஓபராய் இன்டர்காண்டினென்டல், புது தில்லி.

"ட்ரு-டோன்" வழங்கும் பளபளப்பான இயற்கை வண்ணம் பார்க்க பிரமிப்பூட்டுவது"
சீக்ரெட் ஹேர் டிரெஸ்ஸிங் அண்ட் பியூட்டி பார்லர் சென்னை

"ட்ரு-டோன்" உங்கள் கேசத்திற்கு அதன் இயற்கையான வண்ணத்தை வழங்குகிறது"
மாண்டி
விஸ்லா-பெட் ப்யூட்டி சலூன், ஓபராய் ஷெரடன், பம்பாய்-1.




பெரிய மற்றும் நடுத்தரமான பாக்குகளில் கிடைக்கிறது

ARMS-HC-036-140 TAM

முன்னணியில் நிற்கும் கேச அலங்கரிப்பாளர்கள் ஒருமித்து சிபாரிசு செய்வது

## ஹெலென் கர்ட்டிஸ்

# ட்ரு-டோன்

## ஹேர் டை

ஹெலென் கர்ட்டிஸ் ஆண்களுக்கும் பெண்களுக்குமென, உலகிலேயே மிகப் பெருமளவு விற்பனையாகும் கூந்தல் சாயம்.

ட்ரு-டோன் கறை நீக்கியும் கிடைக்கிறது.

தரமாக தயாரித்து வழங்குவோர்: ஜே.கே. ஹெலென் கர்ட்டிஸ் லிட்., பம்பாய்-1













# சில்வர் ப்ரின்ஸ்

## சுத்தமான, மழமழப்பான க்ஷவரத்தைத் தரும்... உறுதிமொழியை நிறைவேற்றிடும் பிளேடு.




## சில்வர் ப்ரின்ஸ்–சுகமான க்ஷவரம்...சோகுசான க்ஷவரம்

"நீங்கள் சில்வர் ப்ரின்ஸ் கொண்டு மழமழப்பாகவும், சுத்தமாகவும் க்ஷவரம் செய்து கொள்ளலாம். ஏனெனில் இறக்குமதியான மிகச் சிறந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீலில், இந்தியாவில் அதி முன்னேற்ற-




மான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப் படுகிறது சில்வர் ப்ரின்ஸ். நீங்களும் சுகமான க்ஷவரத்தைப் பெறுகிறீர்கள். எனவேதான் சில்வர் ப்ரின்ஸ் முகக்ஷவரத்தை சுகக்ஷவரம் என்கிறோம்.

Grant.S.TM

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras - 600031 Editor: K. Rajendran

# எஃகு நகரம்
# ஒரு பூஞ்சோலை நகரமாகவும் ஆக முடியுமா?

இந்தியாவின் எஃகு நகரமான ஜாம்ஷெட்பூர் ஒரு முன்மாதிரி நகரமாகத் திகழவேண்டும் என்றே திட்டமிடப்பட்டிருந்தது.

''நிழல் தரும் மரங்களைக் கொண்ட, அகன்ற தெருக்களாக அமைத்திட மறந்திட வேண்டாம். ஒன்று விட்டு ஒன்று, துரிதமாக வளர்ந்திடும் வகை மரங்களை நடவும். புல்வெளிகளுக்கும் பூங்காக்களுக்கும் போதிய வசதி செய்திடவும்.''—என்று ஜாம்ஷெட்ஜி டாடா தனது மகன் தோராப்புக்கு எழுதியிருந்தார்.

இன்று ஜாம்ஷெட்பூர் அவ்வண்ணமே உள்ளது—எஃகு நகரத்தோடு ஒரு பூஞ்சோலை நகரமாகவும் பரிமளிக்கிறது.

குடியிருப்பு வீடுகள் கூட, எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்ஜி வெளியிட்ட விருப்பங்களை நினைவில் நிறுத்தி, திட்டமிட்டு அமைக்கப் பட்டிருப்பதோடல்லாமல், இன்னும் விரிவுபடுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

மரங்களின் அடர்த்தியில்
தொழிற்சாலை கண்ணுக்குப்
புலனாவதே இல்லை!





**டாடா ஸ்டீல்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)

# CLEVITE

RESEARCH HAS PROVED
**COPPER-LEAD**
TO BE THE RIGHT
COMBINATION
MATERIAL FOR



# HEAVY DUTY
# APPLICATIONS

In 50 years working with all materials, CLEVITE research has proved copper-lead to be the right combination material in the world for heavy duty applications.

Where in all cases, the test is in performance spread over many years, CLEVITE copper-lead have proved to be the best heavy duty engine bearings.





**BIMETAL BEARINGS LIMITED**
(in technical collaboration with Clevite Corporation, Cleveland, Ohio, USA)
**2, ARTS COLLEGE ROAD, COIMBATORE - 18**
A Unit Company of Amalgamations Group